ஸ்ரீ:

# ஸ்ரீ தேவீ மாஹாத்மியம்

॥ श्रीदेवीमाहात्म्यम् ॥

உரை ஆசிரியர்

"அண்ணா"



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

11, ராமகிருஷ்ண மடம் ரோடு,
மயிலாப்பூர், சென்னை 600-004

# ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்

## அருளிய

# உபதேச மொழிகள்

**(10ஆம் பதிப்பு)**

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வரலாற்றுச் சுருக்கமும், தனித்தனித் தலைப்புகளின் கீழ் மிகச் சிறப்பாகத் தொகுக்கப்பட்ட 1121 உபதேச மணிமொழிகளும் அடங்கியது. சமுதாயத்தின் எல்லாத் தரத்து மக்களும் படித்துப் பயன்பெற வேண்டிய ஆன்மிகப் பேழை இது.

**ஸ்ரீ ராஜாஜி கூறினார் :—**

"ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் என்னும் நூலைப் படியுங்கள் ; இந்து மதத்தை அறிந்து கொள்வீர்கள். முன்பு இருந்ததைக் காட்டிலும் நல்லவராவீர்கள்."

**பக்கம் 454** **விலை ரூ. 5-50**

ஸ்ரீ:

# ஸ்ரீ தேவீ மாஹாத்மியம்

## ॥ श्रीदेवीमाहात्म्यम् ॥

(உரையுடன் கூடியது)

உரை ஆசிரியர்

"அண்ணா"




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை-600-004

பிரசுரம் : ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

முதல் வெளியீடு 1957
இரண்டாம் பதிப்பு 1965
மூன்றாம் பதிப்பு 1973



III-3M/3C/1973

விலை ரூ. 8-00

அச்சிட்டோர் :

ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ்
சென்னை - 600086

# பொருளடக்கம்



## தேவீமாஹாத்மியம்

பக்கம்

# முதற்பதிப்பின் முகவுரை

மகாபாரதத்தின் நடுநாயகமாக எழுநூறு சுலோகங்கள டங்கிய பகவத்கீதை அமைந்திருப்பது போல் மார்க்கண்டேய புராணத்தில் எழுநூறு மந்திரவடிவான தேவீமாஹாத்மியம் அமைந்திருக்கிறது. இது சண்டிகா தேவியின் பெருமையைக் கூறுவதால் 'சண்டீ' என்றும், எழுநூறு மந்திரங்களடங்கிய தால் 'ஸப்தசதீ' என்றும் கூறப்படும். ஆஸ்திகர்களால் இது இமயம் முதல் கன்யாகுமரி வரை பாரததேசம் முழுதும் பாரா யணத்திற்கும் ஜபத்திற்கும் ஹோமத்திற்கும் உலக க்ஷேமத் திற்காகவும் அரிஷ்ட நிவிருத்திக்காகவும் தொன்றுதொட்டுப் பெரிதும் கையாளப்பட்டு வருகிறது.

இதற்கு உரைகள் பல உள. இவற்றுள் சில 'சாந்தனவீ', 'புஷ்பாஞ்ஜலி', 'ராமாச்ரமீ', 'நாகேசீ', 'குப்தவதீ', 'தம் சோத்தாரம்', 'துர்க்காப்ரதீபம்' என்பனவாம். காத்யாயனீ தந்த்ரம், கடகதந்த்ரம், க்ரோடதந்த்ரம், மேருதந்த்ரம், மரீசிகல்பம், ருத்ரயாமளம், சிதம்பர ரஹஸ்யம் முதலிய ஆகம நூல்களிலும் பல்வேறு புராணங்களிலும் தேவீமாஹாத் மியத்தின் பெருமை விளக்கிக் கூறப்படுகிறது. இவற்றை யெல்லாம் சில ஆண்டுகளுக்கு முன் ஆராய்ந்து ஜயப்பூர் ஸமஸ்தான பண்டிதர் ஸ்ரீ ஸரயூப்ரஸாத சர்மா என்பவர் 'ஸப்தசதீ ஸர்வஸ்வம்' எனப் பெயர் கொண்ட நூலில் நுணுக்கமான கருத்துக்களைத் தெளிவுற விளக்கியிருக்கிறார். பெரிதும் அந்நூலைப் பின்பற்றியே இவ்வுரை தமிழில் செய்யப் பட்டிருக்கிறது.

பூர்வ பாகத்தில் கவசம், அர்க்கலம், கீலகம், ராத்ரி ஸூக் தம், நவாக்ஷரீ விவேசனம் ஆகியனவும் நடுவில் மூன்று சரித் திர வடிவில் தேவீமாஹாத்மியமும், கடைசியில் தேவீ ஸூக் தம், ரஹஸ்யத்ரயம் ஆகியனவும், அநுபந்தமாக துர்க்கா ஸப்த ச்லோகீ, துர்க்கா ஸூக்தம், இந்த்ராக்ஷீ ஸ்தோத்ரம்,

துர்க்கா ஆபதுத்தாராஷ்டகம், தேவ்யபராதக்ஷமாபன ஸ்தோத்ரம் முதலியவையும், துணை நூல்களின் குறிப்பும் இந் நூலில் அடங்கியுள்ளன. மூலம் முதலில் நாகர எழுத்திலும் அதனடியில் தமிழ் எழுத்திலும் அச்சிடப்பட்டு, மொழி பெயர்ப்பும், ரஹஸ்யார்த்தங்களின் குறிப்புரைகளும் ஆங் காங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. 'ஸப்தசதீ' மூலத்திலும் முன்பின்னுள்ள அங்கங்களிலும் பாடபேதங்கள் பல காணப் படுகின்றன. சிதம்பர ரஹஸ்யத்தில் நிர்ணயிக்கப்பட்டு ஸப்தசதீ ஸர்வஸ்வத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட பாடமே இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

பிரம்ம வித்தையும் ஸ்ரீ வித்தையும் ஒன்றே என்பதைக் கருத்தில் கொண்டு தேவீமாஹாத்மியத்தைப் பாராயணம் செய்ய வேண்டும். பிரம்ம வித்தையான வேதாந்தம் கூறும் உண்மைகளை அனுபவத்திற்குக் கொண்டுவர வழிகாட்டுவது ஸ்ரீ வித்தை. மந்திரமும் தந்திரமும் ஸ்ரீ வித்தையில் அடக்கம். ஸ்ரீ சங்கராசாரியர் பிரபஞ்ச ஸாரத்தில் கூறுகிறார்: "ததா தாம் தார - மித்யாஹு - ரோமாத்மேதி பஹுச்ருதா꞉ | தாமேவ சக்திம் ப்ருவதே ஹ்ரீ-மாத்மேதி சாபரே ||" ஒரே பரம்பொருள் தான் 'ஓம்' என்ற பிரம்மவித்யா மந்திரத் தாலும் 'ஹ்ரீம்' என்ற ஸ்ரீ வித்யா மந்திரத்தாலும் கூறப்படு கிறது. பிரம்மமும் பிரம்ம சக்தியும் பிரிக்க முடியாததலால் ஓங்காரமும் உபயாத்மகம். ஹ்ரீங்காரமும் உபயாத்மகம். 'ஹ்ரீம்' என்பது மாயா பீஜம் அல்லது புவனேசுவரீ பீஜம் எனப்படும். விதையிலிருந்து முளை, கிளை, அரும்பு, மலர், காய், கனி முதலியன தோன்றுமாப் போல் புவனேசுவரீ பீஜத்திலிருந்து மஹாகாளீ, மஹாலக்ஷ்மீ, மஹாஸரஸ்வதீ தோன்றுகின்றனர். அவர்களுடைய ஸமஷ்டி மந்திர வடிவங் களில் முக்கியமானவை இரண்டு—நவாக்ஷரீயும் ஸப்தசதீ மாலா மந்திரமும். நவாக்ஷரீ மந்திரதீக்ஷை பெற்றவர் நவார்ண ஜபத்திற்கு அங்கமாக ஸப்தசதீ பாராயணத்தை யும், ஸப்தசதீ மந்திரத்தை முக்கியமாய்க் கொண்டவர் அதற்கங்கமாக நவாக்ஷரீ ஜபத்தையும் அனுஷ்டிப்பது காணப் படுகிறது.

சிதம்பர ரஹஸ்யத்தில் பரமேசுவரர் பார்வதிக்குக் கூறியது: ''தேவியே! ஸப்தசதீயின் மகிமையைக் கூறுகிறேன், கேள். அதைப் படிப்பவர் ஏழ்மையினின்று விடுபடுவர். சின்மயமான திரிபுரா மூன்று வடிவு கொண்டாள். அசுரர்களைப் போக்கித் தேவர்களுக்கு அருள் புரியும் பொருட்டுப் பரதேவதை காளியுருக் கொண்டாள். அவளே காலாந்தரத்தில் லக்ஷ்மியாகவும் ஸரஸ்வதியாகவும் தோன்றினாள். அவள் வரலாறு பதின்மூன்று அத்தியாயங்களில் எழுநூறு மந்திரங்களில் மார்க்கண்டேய புராணத்தில் கூறப்பட்டுளது. அதைப் படிப்பவர் எல்லா உபத்திரவங்களினின்றும் விடுபட்டு ஸகல சௌக்கியங்களையும் அடைவர்.''

''கிரதுக்களில் எங்ஙனம் அசுவமேதமோ, தேவர்களில் எங்ஙனம் ஹரியோ, அங்ஙனம் ஸ்துதிகளில் ஸப்தசதீ'' என்று டாமரதந்திரம் கூறுகிறது. (யதா வேதோ ஹ்யநாதிர்ஹி தத்வத் ஸப்தசதீ ஸ்ம்ருதா) வேதம் எப்படி அநாதியோ அப்படி ஸப்தசதீ என புவனேசுவரி ஸம்ஹிதை கூறுகிறது. இதைப் பாராயணம் செய்ய நித்திய கர்மாவை முடித்துப் பரிசுத்தமான இடத்திலமர்ந்து ஆசமனம், பிராணாயாமம், ஸங்கல்பம் முதலியவற்றைச் செய்துகொண்டு ஸாவதானமாக முன் பின் கூறியுள்ள அங்கங்களுடனும் நவாக்ஷரீ ஜபத்துடனும் கைக்கொள்ள வேண்டும். ஒரே தடவையில் பதின்மூன்று அத்தியாயங்களையும் பாராயணம் செய்ய அவகாசமில்லாதபோது மத்திம சரித்திரத்தை மட்டிலும் படிக்கலாம்' அல்லது தொடர்ச்சியாக ஏழு தினங்களில் 1; 2-3; 4; 5-6-7-8; 9-10; 11; 12-13 என்ற கிரமத்தில் படிக்கலாம். ஒரு சரித்திரத்தில் அரை குறையாகப் படிக்கக் கூடாது என்ற நியமம் இந்த முறைக்கு இல்லை. மனப்பாடம் செய்து புஸ்தகமில்லாமல் ஜபித்தல் சிறந்தது. 'ஜ்ஞானிநாமபி சேதாம்ஸி', 'துர்க்கே ஸ்ம்ருதா', 'ஸர்வாபாதா-ப்ரசமனம்' போன்ற மந்திரங்களைத் தனியாக ஜபம் செய்தால் அந்தந்த மந்திரத்திற் கனுகுணமான மூர்த்தியை அந்தந்தச் சரித்திரத்தில் கூறியபடி, நியாஸமும் தியானமும் செய்து அதற்கியைந்தபடி. 'விச்வேச்வரீம் ஜகத்-தாத்ரீம்', 'சக்ராதய꞉ ஸுரகணா꞉'

அல்லது 'நமோ தேவ்யை மஹா தேவ்யை' என்ற ஸ்துதியைச் செய்யவேண்டும். ஸகாம பக்தன் இதனால் மனதில் கருதியதை யடைவான். நிஷ்காம பக்தன் மோக்ஷத்தை யடைவான். ஸுரத மகாராஜனுக்கு மேதாமஹரிஷி கூறியதாவது: 'பரமேசுவரியைச் சரணடைவாய், அவளை ஆராதித்தால் அவள் இகலோக இன்பங்களையும் ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பாள்.' அரசன் தன் அரசாட்சியை மீண்டும் பெற்று இன்ப வாழ்வெய்தி எதிர்காலத்தில் மனுவாக விளங்கப்போகிறான் என்றும் ஸமாதி என்ற வைசியன் ஞானம் பெற்று மோக்ஷமடைந்தான் என்றும் கூறி தேவீ மாஹாத்மிய வரலாறு முடிவடைகின்றது.

பரதேவதையின் வழிபாட்டுச் சிறப்பு நமது காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரால் ஸாதனைகளாலும் உபதேசங்களாலும் உலகிற்கு எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அவர் தக்ஷிணேசுவராலயத்தில் பவதாரிணியை வழிபட்டு அவளுடைய பரமானுக்கிரகத்தால் எல்லா தேவதா ரூபங்களும் பரப்பிரம்ம ரூபிணியான அவளேதான் என்பதைத் தம் அனுபவத்தில் கண்டு தம் அடியாரையும் கண்டனுபவிக்கும்படி அருளினார். தேவீமாஹாத்மியத்தைப் பாராயணம் செய்யும் அன்பர்கள் மீண்டும் ஒருமுறை ஸ்ரீராமகிருஷ்ணர் மொழியமுதத்தை வாசித்தால் தெளிவுபடாத கருத்துக்கள் தாமே தெளிவுபடும். ஸ்ரீராமகிருஷ்ணரது வாழ்க்கை நமது மத நூல்கள் எல்லாவற்றிற்குமே தலைசிறந்த நவீன வியாக்யானம் போலிருக்கின்றது. பரதேவதையின் கோர வடிவும் கோபமும் தீயோர்க்குக் கொடியதாகக் காணப்படினும் அடியார்க்கு அபயமளிப்பதாகவே திகழ்கின்றது என்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் நமக்குக் காட்டிக்கொடுக்கின்றார். பராசக்தி அளிக்குந் துன்பமும் மனத்தின் கோணலை நிமிர்த்தவும், குற்றங்களைக் களையவும், பாவக் குவியல்களைப் பொசுக்கவுமே பயன் படுகின்றது. ஆயிரம் யுகங்களாக வளர்ந்த தீமை அவள் கோபத்தில் அரை நொடியில் பட்டுப் போகின்றது. அந்த துர்க்காதேவி நம்மை ரக்ஷிக்கட்டும்.

**துர்க்கே ஸ்ம்ருதா ஹரஸி பீதி-மசேஷஜந்தோ:**
**ஸ்வஸ்தை: ஸ்ம்ருதா மதி-மதீவ சுபாம் ததாஸி|**
**தாரித்ரிய-து:க்க-பயஹாரிணி கா த்வதன்யா**
**ஸர்வோபகார-கரணாய ஸதார்த்ர-சித்தா ||**

*        *        *

நூலைப் பரிசீலித்துப் பிழைகளைத் திருத்துவதில் உதவிய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும் விரைவில் அழகுபட அச்சிட்டுத் தந்த அச்சுக் கூடத்தாருக்கும் என் நன்றி உரித்தாகும்.

ஸ்ரீராமகிருஷ்ண மாணவரில்லம்,
மயிலாப்பூர், சென்னை-4
ஹேமலம்ப ஸ்ரீ ஆவணி மீ 9 உ
25-8-1957

**உரையாசிரியர்**

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

நூலின் தொடக்கத்தில் பாராயணக்கிரமமும் முடிவில் அநுபந்தமாக ஸப்தசதியந்த்ர பூஜனம், நவராத்திரியில் வார்ஷிக சண்டீவிதானம் துர்க்கா சந்த்ரகலா ஸ்துதி, மஹிஷாஸுரமர்த்தினீ ஸ்தோத்ரம், தேவீமாஹாத்மிய ஸ்தோத்ரம் ஆகியவையும் இப் பதிப்பில் புதிதாய்ச் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

ஸ்ரீராமகிருஷ்ண மாணவரில்லம்,
மயிலாப்பூர் சென்னை-4.
26-11-1965

**உரையாசிரியர்**

## மூன்றும் பதிப்பு

இப்பதிப்பில் துர்க்கா சந்த்ரகலாஸ்துதி, மஹிஷாஸுர மர்த்தினீ ஸ்தோத்திரம் ஆகியவற்றிற்கு பதிலாக சண்டீ ஹோம விதானம் சேர்க்கப்பட்டுள்ளது.

*12-6-73.*

**உரையாசிரியர்**

# குறிகளின் விளக்கம்

## உச்சரிப்புக் குறிகள்

| தமிழில் கொட்டை எழுத்து | ஸம்ஸ்கிருத எழுத்து | உச்சரிப்பு உதாரணம் |
|---|---|---|
| க | ग | 'கங்கை' என்பதில் போல |
| ட | ड | 'குடம்' ,, |
| த | द | 'பாதம்' ,, |
| ப | ब | 'இன்பம்' ,, |
| ரு | ऋ | 'எருது' ,, |
| ச | श | 'பாசம்' ,, |

: { ஹ, ஹி, ஹு ... 'ராம:' = ராமஹ; ஸ்ரீ: = ஸ்ரீஹி; பாண்டு: = பாண்டுஹு; என்றவாறு ஈற்றெழுத்துடன் ஒத்துவரும்.
{ ஃப் 'க: கிம்' = கஃப் கிம்.

ऽ 'அ' தொக்கி நிற்பதைக் குறிக்கும்

ँ 'இதँ' = இதகும்.

## மற்றக் குறிகள்

அ.—அவயவப்பொருள்
உ-ம்.—உதாரணம்
ஒ.—ஒப்பிடுக
கீ.—ஸ்ரீமத்பகவத்கீதை
பா.பே.—பாடபேதம்
சங்.—ஸ்ரீசங்கரர்
தே.மா.—தேவீமாஹாத்மியம்
தை.உப.—தைத்திரீய உபநிஷத்து
ஸௌ.ல.—ஸௌந்தர்யலஹரீ
சு.—சுலோகம்
ஸ.ஸ.—ஸப்தசதீ ஸர்வஸ்வம் (ஸரயூப்ரஸாத சர்மா)

॥ आत्मसमर्पणम् ॥

ओं

॥ स्वरूपनिरूपणहेतवे श्रीगुरवे नमः ॥

ஆத்ம ஸமர்ப்பணம்

ஓம்

ஸ்வரூப-நிரூபண-ஹேதவே

ஸ்ரீ குரவே நம:

ஆத்மஸமர்ப்பணம்

ஓம்

ஸ்வரூப விளக்கத்திற்குக் காரணமாகிய

ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம்.

सर्वमंगल-मांगल्ये शिवे सर्वार्थ-साधिके ।
शरण्ये त्र्यंबके गौरि नारायणि नमोऽस्तु ते ॥

*ஸர்வமங்கல-மாங்கல்யே*
*சிவே ஸர்வார்த்த-ஸாதிகே* ।
*சரண்யே த்ர்யம்பகே கௌரி*
*நாராயணி நமோSஸ்து தே* ॥

—தேவீமாஹாத்மியம் 11. 10.

# ॥ देवीमाहात्म्यम् ॥

( सप्तशती )

॥ पारायणक्रम : ॥

आचमनम् ॥ ऐं - आत्मतत्त्वं शोधयामि नमः स्वाहा । ह्रीं विद्यातत्त्वं शोधयामि नमः स्वाहा । क्लीं - शिवतत्त्वं शोधयामि नमः स्वाहा । ऐं ह्रीं क्लीं सर्व-तत्त्वं शोधयामि नमः स्वाहा ॥

गणपति ध्यानम् ॥ शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् । प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ॥

प्राणायामः ॥ ओं भूः + भूर्भुवस्सुवरोम् ॥

संकल्पः ॥ शुभे शोभने मुहूर्ते आद्यब्रह्मणः द्वितीयपरार्धे, श्वेतवराहकल्पे वैवस्वतमन्वन्तरे, अष्टाविंशतितमे कलियुगे प्रथमे-पादे, जंबूद्वीपे, भारतवर्षे भरतखण्डे मेरोर्दक्षिणे पार्श्वे, शकाब्दे

---

# தேவீ மாஹாத்மியம்

( ஸப்தசதீ )

பாராயணக்ரம :

ஆசமனம் ‖ ஐம் — ஆத்மதத்வம் சோதயாமி நம : ஸ்வாஹா | ஹ்ரீம் — வித்யாதத்வம் சோதயாமி நம : ஸ்வாஹா | க்லீம் — சிவதத்வம் சோதயாமி நம: ஸ்வாஹா | ஐம் - ஹ்ரீம் - க்லீம் - ஸர்வதத்வம் சோதயாமி நம : ஸ்வாஹா ‖

கணபதி த்யானம் ‖ சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம் ‖ ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபசாந்தயே ‖

ப்ராணாயாம : ‖ ஓம் பூ : + பூர்ப்புவஸ்ஸுவரோம் ‖

ஸங்கல்ப : ‖ சுபே சோபனே முஹூர்த்தே ஆத்யப்ரஹ்மண : த்விதீயபரார்த்தே, ச்வேதவராஹ

अस्मिन्वर्तमाने व्यावहारिके प्रभवादि षष्टिसंवत्सराणां मध्ये — नामसंवत्सरे — अयने — ऋतौ—मासे—पक्षे—शुभतिथौ— वासरयुक्तायां-नक्षत्रयुक्तायां शुभयोग - शुभकरण - सकलविशेषण-विशिष्टायां अस्यां - शुभतिथौ ममोपात्त-समस्त - दुरितक्षयद्वारा श्री दुर्गालक्ष्मी - सरस्वती प्रीत्यर्थं अस्माकं सर्वेषां सकुटुम्बानां क्षेमस्थैर्य - वीर्य - विजय - आयुरारोग्य - ऐश्वर्याभिवृद्ध्यर्थं समस्त - मंगलावाप्त्यर्थं ।

[ * अमुकगोत्रोत्पन्नस्य अमुकनाम्नः दुर्गा-लक्ष्मी-सरस्वती-प्रसादेन

(i) सर्वापन्निवृत्त्यर्थं

---

கல்பே, வைவஸ்வதமன்வந்தரே, அஷ்டாவிம்சதி தமே, கலியுகே, ப்ரதமேபாதே, ஜம்பூத்வீபே, பாரதவர்ஷே, பரதகண்டே மேரோர்-தக்ஷிணே பார்ச்வே சகாப்தே அஸ்மின் வர்த்தமானே வ்யாவஹாரிகே ப்ரபவாதி-ஷஷ்டிஸம்வத்ஸராணும் மத்யே — நாமஸம்வத்ஸரே — அயனே — ருதௌ — மாஸே — பக்ஷே — சுபதிதௌ — வாஸரயுக்தாயாம் — நக்ஷத்ரயுக்தாயாம் சுபயோக - சுப கரண - ஸகல விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் - சுபதிதௌ மமோபாத்த - ஸமஸ்த - துரித - க்ஷயத்வாரா ஸ்ரீ துர்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீ - ப்ரீத்யர்த்தம் அஸ்மாகம் ஸர்வேஷாம் ஸகுடும்பாணும் க்ஷேம - ஸ்தைர்ய - வீர்ய விஜய - ஆயுராரோக்ய - ஐச்வர்யாபிவ்ருத்த்யர்த்தம் ஸமஸ்த-மங்களாவாப்த்யர்த்தம்

* [ அமுககோத்ரோத்பன்னஸ்ய, அமுகநாம்ன : துர்கா லக்ஷ்மீ ஸரஸ்வதி ப்ரஸாதேன —

(i) ஸர்வாபந்நிவ்ருத்த்யர்த்தம்

---

* ஒரு குறிப்பிட்ட பலனை உத்தேசித்திருந்தால் இதையும் ஸங்கல்பத்தில் சேர்த்துக் கொள்க.

(ii) (अमुक) व्याधिनाशपूर्वकं क्षिप्रारोग्यावाप्त्यर्थं

(iii) अपमृत्युपरिहारपूर्वकं आयुरभिवृद्धयर्थं

(iv) (अमुक) वशीकरणार्थं

(v) ग्रहपीडा-निवारणार्थं

(vi) भूतप्रेतपिशाचोपद्रवादि—सर्वारिष्टनिवारणार्थं

(vii) सकलैश्वर्य - सिद्धिद्वारा (अमुक) कुलदेवता - प्रसाद-सिद्धयर्थं ]

कवच - अर्गला - कीलक - पठन - नवाक्षरीमन्त्रजप - रात्रिसूक्त पठनपूर्वकं, नवाक्षरीमन्त्रजप - देवीसूक्त - रहस्यत्रय - पठनान्तं, श्रीदेवीमाहात्म्य - पारायणं करिष्ये ॥

---

(ii) (அமுக) வ்யாதிநாச - பூர்வகம் க்ஷிப்ர - ஆரோக்யாவாப்த்யர்த்தம்

(iii) அபம்ருத்யு - பரிஹார - பூர்வகம் ஆயுரபி - வ்ருத்த்யர்த்தம்

(iv) (அமுக) வசீகரணார்த்தம்

(v) க்ரஹபீடா-நிவாரணார்த்தம்

(vi) பூதப்ரேத - பிசாசோபத்ரவாதி - ஸர்வா - ரிஷ்ட - நிவாரணார்த்தம்

(vii) ஸகலைச்வர்ய - ஸித்தித்வாரா (அமுக) குல - தேவதா - ப்ரஸாத ஸித்த்யர்த்தம்]

கவச - அர்க்கல - கீலக - படன - நவாக்ஷரீமந்த்ர - ஜப - ராத்ரிஸூக்த - படன - பூர்வகம், நவாக்ஷரீ - மந்த்ரஜப - தேவீஸூக்த - ரஹஸ்யத்ரய - படனாந்தம் ஸ்ரீதேவீமாஹாத்ம்ய - பாராயணம் கரிஷ்யே ||

॥ शापोद्धारः ॥

'ओं ह्रीं क्लीं श्रीं क्रां क्रीं चण्डिकादेवि शापनाशानुग्रहं कुरु कुरु स्वाहा' इति पाठादौ सप्तवारं जपेत् ॥

॥ जाग्रत्करणम् ॥

'ओं रं सं ओं ऐं ह्रीं क्लीं चामुण्डायै विच्चे रं क्षं ओं' इति सप्तवार-जपेन जाग्रविद्या भवति ॥

॥ उत्कीलनम् ॥

'ओं श्रीं क्लीं ह्रीं सप्तशति चण्डिके उत्कीलनं कुरु कुरु स्वाहा' इति एकविंशति - वारं जपेत् ॥

---

**சாபோத்தார :**

'ஓம் - ஹ்ரீம் - க்லீம் - ஸ்ரீம் - க்ராம் - க்ரீம் - சண்டிகாதேவி சாபநாசானுக்ரஹம் குரு குரு ஸ்வாஹா' இதி பாடாதௌ ஸப்தவாரம் ஜபேத் ||

**ஜாக்ரத்கரணம்**

'ஓம் - ரம் - ஸம் - ஓம் - ஐம் - ஹ்ரீம் - க்லீம் - சாமுண்டாயை விச்சே - ரம் - க்ஷம் - ஓம்' இதி ஸப்த - வாரஜபேன ஜாக்ரவித்யா பவதி ||

**உத்கீலனம்**

'ஓம் - ஸ்ரீம் - க்லீம் - ஹ்ரீம் - ஸப்தசதி சண்டிகே உத்கீலனம் குரு குரு ஸ்வாஹா' இதி ஏகவிம்சதி - வாரம் ஜபேத் ||

# ॥ देवीमाहात्म्यम् ॥

## ( सप्तशती )

## पूर्वभागः

### कवचम् ॥ १ ॥

### ॥ न्यासः ॥

अस्य श्रीदेवीकवचस्तोत्र-महामन्त्रस्य ब्रह्मा ऋषिः । अनुष्टुप्छन्दः । श्रीमहालक्ष्मीर्देवता । ह्रां बीजं, ह्रीं शक्तिः, ह्रूं कीलकम् । श्रीमहालक्ष्मी-प्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः ॥

---

# தேவீ மாஹாத்மியம்

## பூர்வ பாகம்

### 1. கவசம்

### ந்யாஸ :

*அஸ்ய ஸ்ரீதேவீ கவசஸ்தோத்ர - மஹாமந்த்ரஸ்ய ப்ரஹ்மா ருஷி : । அனுஷ்டுப் சந்த : । ஸ்ரீ மஹாலக்ஷ்மீர் தேவதா । ஹ்ராம் பீஜம், ஹ்ரீம் சக்தி :, ஹ்ரூம் கீலகம் । ஸ்ரீ மஹாலக்ஷ்மீ - ப்ரஸாத - ஸித்த்யர்த்தே ஜபே விநியோக:* ॥

---

**கவசம்**—' கவசம் பீஜமாதிஷ்ட - மர்க்கலா சக்தி - ருச்யதே । கீலகம் கீலகம் ப்ராஹு : ஸப்தசத்யா மஹாமனோ : ॥ ' எல்லா மந்திரங்களுக்கும் பீஜமும் சக்தியும் கீலகமும் எங்ஙனம் ஆதியில் சிந்திக்கப்படவேண்டுமோ அங்ஙனம் ஸப்தசதீ மஹாமந்திரத்திற்குக் கவசம் பீஜமாகவும், அர்க்கலா சக்தியாகவும், கீலகம் கீலகமாகவும் படிக்கப்படவேண்டும்.

मार्कण्डेय उवाच—

यद्गुह्यं परमं लोके सर्वरक्षाकरं नृणाम् ।
यन्न कस्यचिदाख्यातं तन्मे ब्रूहि पितामह ॥ १ ॥

ब्रह्मोवाच—

अस्ति गुह्यतमं विप्र सर्वभूतोपकारकम् ।
देव्यास्तु कवचं पुण्यं तच्छृणुष्व महामुने ॥ २ ॥

*மார்க்கண்டேய உவாச—*
*யத்குஹ்யம் பரமம் லோகே ஸர்வ-ரக்ஷாகரம் ந்ருணாம்*
*யந்ந கஸ்யசிதாக்யாதம் தன்மே ப்ரூஹி பிதாமஹ || 1 ||*

*ப்ரஹ்மோவாச—*
*அஸ்தி குஹ்யதமம் விப்ர ஸர்வபூதோபகாரகம் |*
*தேவ்யாஸ்து கவசம் புண்யம் தச்ச்ருணுஷ்வ [மஹாமுனே || 2 ||*

---

## பூர்வ பாகம்

### 1. கவசம்

*மார்க்கண்டேயர் கூறியது—*

*1. பிரம்மதேவரே! எது உலகில் மிக்க ரகசியமானதோ, மனிதர்க்கு எல்லா ரக்ஷையையும் அளிப்பதோ, (இதுவரை) எவர்க்கும் சொல்லப்படாதுளதோ அதை (உலக நன்மைக்காக) எனக்கு உபதேசித்தருளல் வேண்டும்.*

*பிரம்மா கூறியது—*

*2. பிராம்மணரே! உயிர்களனைத்திற்கும் உபகாரமாகியதும் மிக்க ரகசியமாகியதும் புண்ணியமாகியதுமான தேவீ கவசம் உளது. பெருமை மிக்க முனிவரே! அதைக் கேளும்.*

---

' அர்க்கலம் கீலகஞ்சாதௌ படித்வா கவசம் படேத் ' என்று சிதம்பர ஸம்ஹிதையில் கூறியது ஸம்பிரதாய பேதம்.

அர்கலா துரிதம் ஹந்தி கீலகம் பலதம் பவேத் |
கவசம் ரக்ஷயேந்நித்யம் தஸ்மாதேதத் த்ரயம் படேத் ||

प्रथमं शैलपुत्री च द्वितीयं ब्रह्मचारिणी ।
तृतीयं चन्द्रघण्टेति कूष्माण्डेति चतुर्थकम् ॥ ३ ॥

पंचमं स्कन्दमातेति षष्ठं कात्यायनीति च ।
सप्तमं कालरात्रीति महागौरीति चाष्टमम् ॥ ४ ॥

*ப்ரதமம் சைலபுத்ரீ ச த்விதீயம் ப்ரஹ்மசாரிணீ |*
*த்ருதீயம் சந்த்ரகண்டேதி கூஷ்மாண்டேதி சதுர்த்-*
*[தகம் || 3 ||*

*பஞ்சமம் ஸ்கந்தமாதேதி ஷஷ்டம் காத்யாயனீதி ச |*
*ஸப்தமம் காலராத்ரீதி மஹாகௌரீதி சாஷ்டமம் || 4 ||*

---

*3. முதலாவது பர்வதராஜபுத்திரி, இரண்டாவது பிரம்மசாரிணீ, மூன்றுவது சந்திரகண்டா, நான்காவது கூஷ்மாண்டா.*

*4. ஐந்தாவது ஸ்கந்தமாதா, ஆறுவது காத்யாயனீ, ஏழாவது காலராத்ரீ, எட்டாவது மஹாகௌரீ.*

---

3. **ப்ரஹ்மசாரிணீ**—ப்ரஹ்மரூப - ப்ரதா | சந்த்ரகண்டா—சந்த்ரோஹஸ்த கதாயாம் கண்டாயாம் யஸ்யா: | 'ஆஹ்லாதகாரிணீ - தேவி சந்த்ரகண்டேதி கீர்த்யதே' | கூஷ்மாண்டா—குத்ஸிதே ஊஷ்மா ஸந்தாபஸ்-தாபத்ரய ரூபோ ஸம்ஸார: யஸ்யோதரே | தாபத்ரய-யுக்த-ஸம்ஸார-பக்ஷணகர்த்ரீ,

4. **ஸ்கந்தமாதா**— 'பகவான் ஸநத்குமாரஸ்-தம் ஸ்கந்த இத்யாசக்ஷதே' என்று சாந்தோக்கியம் கூறுகிறது.

காத்தியாயனர் ஆசிரமத்தில் தோன்றியதால் 'காத்யாயனி'. இவள் என்றும் கன்னிகை.

**காலராத்ரீ**—ஸர்வமாரகஸ்ய காலஸ்ய ராத்ரீ நாசிகேத்யர்த்த: |

**மஹாகௌரீ**—நர்மோக்த்யா சிவேன காலீத்யுக்தே தபஸா கௌரவர்ணஸ் ஸம்பாதனத்வாத் |

नवमं सिद्धिदा प्रोक्ता नव दुर्गाः प्रकीर्तिताः ।
उक्तान्येतानि नामानि ब्रह्मणैव महात्मना ॥ ५ ॥

अग्निना दह्यमानस्तु शत्रुमध्ये गतो रणे ।
विषमे दुर्गमे चैव भयार्ताः शरणं गताः ॥ ६ ॥

न तेषां जायते किंचिदशुभं रणसंकटे ।
नापदं तस्य पश्यन्ति सर्वदुःखक्षयंकरी ॥ ७ ॥

நவமம் ஸித்திதா ப்ரோக்தா நவதுர்கா : ப்ரகீர்த்திதா: |
உக்தான்யேதானி நாமானி ப்ரஹ்மணைவ மஹாத்மனா ||

அக்னினா தஹ்யமானஸ்து சத்ருமத்யே கதோ ரணே |
விஷமே துர்கமே சைவ பயார்த்தா : சரணங் கதா : ||

ந தேஷாம் ஜாயதே கிஞ்சி-தசுபம் ரணஸங்கடே |
நாபதம் தஸ்ய பச்யந்தி ஸர்வ-துஃக்க-க்ஷயங்கரீ || 7 ||

---

5. ஒன்பதாவது ஸித்திப்ரதா என இவ்வாறு துர்க்கையின் ஒன்பது வடிவங்கள் உனக்கு எடுத்துரைக்கப்பட்டன. இந் நாமங்கள் பெருமைமிக்க வேதபுருஷனாலேயே கூறப்பட்டவை.

6. அக்கினியால் எரிக்கப்பட்டவர்களும், யுத்தத்தில் சத்துருவினிடை அகப்பட்டுக்கொண்டவர்களும், கடக்கமுடியாத ஸங்கடத்தில் பயமடைந்தவர்களும், (மேற்கூறிய நாமங்களில் ஒன்றை மனதால் நினைத்து தேவியிடம்) சரண் புகுந்தவர்கள் (ஆயின்) ;

7. அவர்களுக்கு யுத்த ஸங்கடத்தில் தீங்கு சிறிதும் ஏற்படாது. அவர்களில் ஒருவருக்கும் ஆபத்து வர (நவதுர்க்கைகளும்) பார்த்திருக்கமாட்டார்கள். துர்க்கா தேவியானவள் எல்லாத் துன்பங்களையும் துடைப்பவள்.

---

5. ஸித்திதா — மோக்ஷத்தையளிப்பவள்.

यैस्तु भक्त्या स्मृता नूनं तेषामृद्धिः प्रजायते ।
प्रेत-संस्था तु चामुण्डा वाराही महिषासना　　॥ ८ ॥

ऐन्द्री गजसमारूढा वैष्णवी गरुडासना ।
माहेश्वरी वृषारूढा कौमारी शिखिवाहना　　॥ ९ ॥

ब्राह्मी हंससमारूढा सर्वाभरण-भूषिता ।
नानाभरण-शोभाढ्या नानारत्नोप-शोभिताः　　॥ १० ॥

*யைஸ்து பக்த்யா ஸ்ம்ருதா நூனம் தேஷாம் ருத்தி :*
*[ப்ரஜாயதே |*
*ப்ரேத-ஸம்ஸ்தா துசாமுண்டாவாராஹீமஹிஷாஸனு ||*

*ஐந்த்ரீ கஜஸமாருடா வைஷ்ணவீ கருடாஸனு |*
*மாஹேச்வரீ வ்ருஷாருடா கௌமாரீ சிகிவாஹனு || 9 ||*

*ப்ராஹ்மீ ஹம்ஸ-ஸமாருடா ஸர்வாபரண-பூஷிதா |*
*நானுபரண-சோபாட்யா நானுரத்னேப-சோபிதா : || 10 ||*

---

*8. எவர்களால் பக்தியுடன் தேவியானவள் நினைக்கப்பட்டாளோ அவர்களுக்குச் செல்வப்பெருக்கு நிச்சயம் ஏற்படும். சாமுண்டா தேவியானவள் பிரேதத்தை ஆஸனமாய்க் கொண்டவள்; வாராஹீதேவி எருமையை வாகனமாய்க் கொண்டவள்.*

*9. இந்திராணீதேவீ ஐராவதம் என்ற யானை வாகன முடையவள்; விஷ்ணுசக்தியான மஹாலக்ஷ்மி கருடவாகன முடையவள்; மஹேசுவரபத்தினி விருஷபவாகன முடையவள்; குமரக்கடவுளின் சக்தி மயில்வாகன முடையவள்.*

*10. எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்ற பிரம்ம பத்தினி ஹம்ஸ வாகனத்தை யுடையவள். எல்லோருமே பலவகை ஆபரணங்களும் பூண்டு பலவகைப்பட்ட ரத்னங்களால் பிரகாசிப்பவர்கள்.*

दृश्यन्ते रथमारूढा देव्यः क्रोधसमाकुलाः ।
शङ्खं चक्रं गदां शक्तिं हलं च मुसलायुधम् ॥ ११ ॥
खेटकं तोमरं चैव परशुं पाशमेव च ।
कुन्तायुधं त्रिशूलं च शाङ्‌र्गायुध-मनुत्तमम् ॥ १२ ॥
दैत्यानां देहनाशाय भक्ताना-मभयाय च ।
धारयन्त्यायुधानीत्थं देवानां च हिताय वै ॥ १३ ॥
महाबले महोत्साहे महाभय-विनाशिनि ।
त्राहि मां देवि दुष्प्रेक्ष्ये शत्रूणां भयवर्धिनि ॥ १४ ॥

த்ருச்யந்தே ரதமாருடா தேவ்ய : க்ரோத-ஸமாகுலா : |
சங்கம் சக்ரம் கதாம் சக்திம் ஹலஞ்ச முஸலாயுதம் ||
கேடகம் தோமரஞ் சைவ பரசும் பாசமேவ ச |
குந்தாயுதம் த்ரிசூலஞ் ச சார்ங்காயுத-மனுத்தமம் || 12 ||
தைத்யானும் தேஹநாசாய பக்தாஞு-மபயாய ச |
தாரயந்த்-யாயுதானீத்தம் தேவாஞுஞ் ச ஹிதாய வை ||
மஹாபலே மஹோத்ஸாஹே மஹாபய-விநாசினி |
த்ராஹி மாம் தேவி துஷ்ப்ரேக்ஷ்யே சத்ருணும்
[ பயவர்த்தினி || 14 ||

---

11. எல்லா தேவிகளும் கோபத்தால் கலங்குபவர்கள்ாய்த் தேரில் ஏறி (தேவர்களை ரக்ஷிக்கும் பொருட்டு) காட்சியளிக்கின்றனர். சங்கு, சக்ரம், கதை, சக்தி, கலப்பை, உலக்கை முதலிய ஆயுதங்களும் ;

12. கேடகம், தோமரம், கோடரி, கயிறு, குந்தாயுதம், திரிசூலம், ஒப்புயர்வற்ற சார்ங்கம் எனும் வில் ;

13. ஆகிய ஆயுதங்களை அசுரர்களின் தேகநாசத்திற்கும் பக்தர்களின் பயநாசத்திற்கும் தேவர்களின் நன்மைக்குமாகத் தரிக்கின்றனர்.

14. மஹாபலம் பொருந்தியவளே ! மஹோத்ஸாஹம் பொருந்தியவளே ! கொடிய பயத்தைப் போக்குபவளே ! சத்துருக்களுக்குப் பயத்தை வளர்ப்பவளே ! காட்சிக்கரிய தேவியே ! என்னைக் காத்தருள்வாய்.

प्राच्यां रक्षतु मामैन्द्री आग्नेय्या-मग्निदेवता ।
दक्षिणेऽवतु वाराही नैर्ऋत्यां खड्ग-धारिणी ॥ १५ ॥
प्रतीच्यां वारुणी रक्षे-द्वायव्यां मृगवाहिनी ।
रक्षे-दुदीच्यां कौमारी ईशान्यां शूलधारिणी ॥ १६ ॥
ऊर्ध्वं ब्रह्माणि मे रक्षे-दधस्ता-द्वैष्णवी तथा ।
एवं दश दिशो रक्षे-च्चामुण्डा शव-वाहना ॥ १७ ॥

*ப்ராச்யாம் ரக்ஷது மாமைந்த்ரீ ஆக்னேய்யா-மக்னி [தேவதா |*
*தக்ஷிணேऽவது வாராஹீ நைர்ருத்யாம் கட்கதாரிணீ ||*
*ப்ரதீச்யாம் வாருணீ ரக்ஷேத்-வாயவ்யாம் ம்ருகவா- [ஹினீ |*
*ரக்ஷே-துதீச்யாம் கௌமாரீ ஈசான்யாம் சூலதாரிணீ ||*
*ஊர்த்வம் ப்ரஹ்மாணி மே ரக்ஷே-ததஸ்தாத்-வைஷ்- [ணவீ ததா |*
*ஏவம் தசதிசோ ரக்ஷேச்-சாமுண்டா சவவாஹனா || 17 ||*

15. கிழக்கில் என்னை இந்திராணீ காப்பாற்றட்டும்; அக்னி மூலையில் அக்னி தேவதையும், தெற்கில் வாராஹியும் நிருருதி மூலையில் கட்கதாரிணியும் காப்பாற்றட்டும்.

16. மேற்கில் வாருணீ சக்தியும், வாயு மூலையில் மிருக வாகினியான வாயுசக்தியும் காப்பாற்றட்டும். வடக்கில் கௌமாரியும், ஈசானமூலையில் சூலதாரிணியும் காப்பாற் றட்டும்.

17. பிரஹ்மாணி! மேலே நீ காத்தருள்வாய்; விஷ்ணு சக்தியே! கீழே நீ காத்தருள்வாய். இங்ஙனம் பத்துத் திசை களையும் சவவாகனமுடைய சாமுண்டாதேவீ காத்தருள வேண்டும்.

---

15. **வாராஹீ**—வராஹ்ரைந்தீதி வராஹோ யம: | தஸ்ய சக்திர்வாராஹீ.
16. **ம்ருகவாஹினீ**—வாயுதேவதைக்கு மான் வாகனமாதலால் வாயுசக்தி.
**கௌமாரீ**—குமார: குபேர: | குபேரசக்தி, திக்பாலப் பிரகரணத்தால்.
**சூலதாரிணீ**—ஈசான சக்தி.

जया मे चाग्रतः स्थातु विजया स्थातु पृष्ठतः ।
अजिता वामपार्श्वे तु दक्षिणे चापराजिता ॥ १८ ॥

शिखामुद्योतिनी रक्षेदुमा मूर्ध्नि व्यवस्थिता ।
मालाधरी ललाटे च भ्रुवो रक्षेद्यशस्विनी ॥ १९ ॥

त्रिनेत्रा च भ्रुवो-र्मध्ये यमघण्टा च नासिके ।
शङ्खिनी चक्षुषो-र्मध्ये श्रोत्रयोर्द्वारवासिनी ॥ २० ॥

ஜயா மே சாக்ரத:ஸ்தாது விஜயா ஸ்தாது ப்ருஷ்டத: |
அஜிதா வாமபார்ச்வே து தக்ஷிணே சாபராஜிதா ||

சிகா-முத்யோதினீ ரக்ஷே-துமா மூர்த்னி-வ்யவஸ்திதா |
மாலாதரீ லலாடே ச ப்ருவோ ரக்ஷேத்-யசஸ்வினீ || 19 ||

த்ரிநேத்ரா ச ப்ருவோர்-மத்யே யமகண்டா ச நாஸிகே |
சங்கினீ சக்ஷுஷோர்-மத்யே ச்ரோத்ரயோர்-த்வார-
[வாஸினீ || 20 ||

---

18. ஜயா சக்தி என் முன்னிருக்கட்டும்; விஜயாசக்தி பின்னிருக்கட்டும்; அஜிதா இடது பக்கமும், அபராஜிதா வலது பக்கமும் இருக்கட்டும்.

19. சிகையை உத்யோதினீ சக்தியும், சிரசில் உறையும் உமா சிரசையும், லலாடத்தில் மாலாதாரியும், புருவத்தை யசஸ்வினியும் காத்தருளவேண்டும்.

20. புருவமத்தியில் த்ரிநேத்ரா தேவியும், நாசிகையில் யமகண்டாதேவியும், கண்களின் நடுவில் சங்கினீ சக்தியும், காதுகளில் துவாரவாஸினீ சக்தியும் (ரக்ஷிக்கவேண்டும்).

---

19. மாலாதரீ—முண்டமாலை யணிந்தவள்.

कपोलौ कालिका रक्षेत् कर्णमूले तु शांकरी ।
नासिकायां सुगन्धा च उत्तरोष्ठे च चर्चिका ॥ २१ ॥

अधरे चामृतकला जिह्वायां च सरस्वती ।
दन्तान् रक्षतु कौमारी कण्ठमध्ये च चण्डिका ॥ २२ ॥

घण्टिकां चित्रघण्टा च महामाया च तालुके ।
कामाक्षी चिबुकं रक्षे-द्वाचं मे सर्वमंगला ॥ २३ ॥

ग्रीवायां भद्रकाली च पृष्ठवंशी धनुर्धरी ।
नीलग्रीवा बहिष्कण्ठे नलिकां नलकूबरी ॥ २४ ॥

*கபோலௌ காலிகா ரக்ஷேத் கர்ணமூலே து சாங்கரீ |*
*நாஸிகாயாம் ஸுகந்தா ச உத்தரோஷ்டே ச சர்ச்சிகா ||*
*அதரே சாம்ருதகலா ஜிஹ்வாயாஞ் ச ஸரஸ்வதீ |*
*தந்தான் ரக்ஷது கௌமாரீ கண்டமத்யே ச சண்டிகா ||*
*கண்டிகாம் சித்ரகண்டா ச மஹாமாயா ச தாலுகே |*
*காமாக்ஷீ சிபுகம் ரக்ஷேத் வாசம் மே ஸர்வமங்கலா ||*
*க்ரீவாயாம் பத்ரகாளீ ச ப்ருஷ்டவம்சீ தனுர்தரீ |*
*நீலக்ரீவா பஹிஷ்கண்டே நலிகாம் நலகூபரீ || 24 ||*

---

*21. கன்னத்தில் காளிகாதேவியும், கர்ணமூலத்தில் சாங்கரீதேவியும், நாசிகைகளில் ஸுகந்தாதேவியும், மேலுதட்டில் சர்ச்சிகாதேவியும் ரக்ஷிக்கட்டும்.*

*22. கீழுதட்டில் அம்ருதகலாதேவியும், நாக்கில் ஸரஸ்வதியும் இருந்து காப்பாற்றட்டும். பற்களைக் கௌமாரியும், கழுத்தின் நடுவில் சண்டிகையும் காப்பாற்றட்டும்.*

*23. உள் நாக்கைச் சித்திரகண்டாதேவியும், தாடைகளை மகாமாயையும் மோவாய்க்கட்டையைக் காமாக்ஷியும், வாக்கை ஸர்வமங்களாதேவியும் காப்பாற்றட்டும்.*

*24. கழுத்தில் பத்ரகாளியும், முதுகெலும்பில் தனுர்த்தரீதேவியும், கழுத்தின் வெளியில் நீலக்கிரீவாதேவியும், கழுத்தெலும்பை நளகூபரீதேவியும், காப்பாற்றட்டும்.*

---

22. கௌமாரீ—குமாரன் கார்த்திகேயன் ; அவனுடைய சக்தி.
24. நளகூபரீ—நளகூபரன் குபேர புத்திரன் ; அவனுடைய சக்தி.

खड्गधारिण्युभौ स्कन्धौ बाहू मे वज्रधारिणी ।
हस्तयो-र्दण्डिनी रक्षे-दंबिका चांगुलीषु च ॥ २५ ॥

नखाञ्शूलेश्वरी रक्षेत् कक्षौ रक्षेन्नलेश्वरी ।
स्तनौ रक्षेन्महादेवी मनः शोक-विनाशिनी ॥ २६ ॥

हृदयं ललितादेवी ह्युदरे शूलधारिणी ।
नाभिं च कामिनी रक्षेद् गुह्यं गुह्येश्वरी तथा ॥ २७ ॥

கட்கதாரிண்யுபௌ ஸ்கந்தௌ பாஹூ மே வஜ்ர-
[தாரிணீ ।
ஹஸ்தயோர்-தண்டினீ ரக்ஷே-தம்பிகா சாங்கு-
[லீஷு ச ॥ 25 ॥

நகான் சூலேச்வரீ ரக்ஷேத் கக்ஷௌ ரக்ஷேந் நலேச்வரீ ।
ஸ்தனௌ ரக்ஷேந்-மஹாதேவீ மன: சோக-விநாசினீ ॥

ஹ்ருதயம் லலிதாதேவீ ஹ்யுதரே சூலதாரிணீ ।
நாபிஞ்ச காமினீ ரக்ஷேத்-குஹ்யம் குஹ்யேச்வரீ ததா ॥

---

25. இருதோள்களையும் கட்கதாரிணியும், இருபுஜங்களையும் வஜ்ரதாரிணியும், கைகளை தண்டினியும், விரல்களில் அம்பிகையும் காப்பாற்றட்டும்.

26. நகங்களை சூலேச்வரி ரக்ஷிக்கட்டும். கக்ஷங்களை அனலேசுவரி ரக்ஷிக்கட்டும். ஸ்தனங்களை மஹாதேவி ரக்ஷிக்கட்டும். மனதைச் சோகவிநாசினி ரக்ஷிக்கட்டும்.

27. இருதயத்தை லலிதாதேவியும், வயிற்றில் சூலதாரிணியும், நாபியைக் காமினீ தேவியும், ரஹஸ்யஸ்தானத்தை குஹ்யேசுவரியும் ரக்ஷிக்கட்டும்.

---

26. நலேச்வரீ—அநலேச்வரீ, அக்னிசக்தி (அகார அபாவ: ஆர்ஷ: ):

27. குஹ்யேச்வரீ—நேபாளபீடாதிஷ்டான தேவதை.

भूतनाथा च मेढ्रं च गुदं महिषवाहिनी ।
कट्यां भगवती रक्षे-ज्जानुनी विन्ध्यवासिनी ॥ २८ ॥

जङ्घे महाबला रक्षे-ज्जानुमध्ये विनायकी ।
गुल्फयो-र्नारसिंही च पादपृष्ठे मितौजसी ॥ २९ ॥

पादांगुली: श्रीधरी च पादाधस्तलवासिनी ।
नखान् दंष्ट्राकराली च केशांश्चैवोर्ध्वकेशिनी ॥ ३० ॥

பூதநாதா ச மேட்ரஞ் ச குதம் மஹிஷவாஹினீ |
கட்யாம் பகவதீ ரக்ஷேஜ்-ஜானுனீ விந்த்யவாஸினீ ||

ஜங்கே மஹாபலா ரக்ஷேஜ்-ஜானுமத்யே விநாயகீ |
குல்பயோர்-நாரஸிஹ்மீ ச பாதப்ருஷ்டே மிதௌஜஸீ ||

பாதாங்குலீ: ஸ்ரீதரீ ச பாதாऽதஸ்தல-வாஸினீ |
நகான் தம்ஷ்ட்ராகராலீ ச கேசாம்ச்சைவோர்த்வகேசினீ||

28. பூதநாதா லிங்கத்தையும், மஹிஷவாஹினி அபானத்துவாரத்தையும், இடுப்பில் பகவதியும், முழங்கால்களை விந்திய வாஸினியும் ரக்ஷிக்கட்டும்.

29. துடைகளை மஹாபலாதேவியும், முழங்கால் நடுவில் விநாயகீதேவியும், கணுக்கால்களில் நாரஸிஹ்மீதேவியும், பின்னங்கால்களில் மிதௌஜஸியும் ரக்ஷிக்கட்டும்.

30-31. கால் விரல்களை ஸ்ரீதரியும், பாதத்தின்கீழ் தலவாஸினியும், நகங்களை தம்ஷ்ட்ராகராலியும், கேசங்களை ஊர்த்துவ

---

28. பகவதீ—(ஒ.) ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய தர்மஸ்ய யசஸ: ச்ரிய: | வைராக்யஸ்ய ச மோக்ஷஸ்ய ஷண்ணாம் பக இதீர்யதே |

29. விநாயகீ—'விசேஷேண நயதி நீதிமார்க்கம் ஜனனிதி விநாயகீ.'

रोमकूपेषु कौबेरी त्वचं वागीश्वरी तथा ।
रक्त-मज्जा-वसा-मांसा न्यस्थि-मेदांसि पार्वती ॥ ३१ ॥

अन्त्राणि कालरात्रिश्च पित्तं च मुकुटेश्वरी ।
पद्मावती पद्मकोशे कफे चूडामणिस्तथा ॥ ३२ ॥

ज्वालामुखी नखज्वाला-मभेद्या सर्वसन्धिषु ।
शुक्रं ब्रह्माणि मे रक्षेच्छायां छत्रेश्वरी तथा ॥ ३३ ॥

*ரோமகூபேஷு கௌபேரீ த்வசம் வாகீச்வரீ ததா |*
*ரக்த-மஜ்ஜா-வஸா-மாம்ஸான்-யஸ்தி-மேதாம்ஸி [பார்வதீ || 31 ||*

*அந்த்ராணி காலராத்ச்சரி பித்தஞ் ச முகுடேச்வரீ |*
*பத்மாவாதீ பத்மகோசே கபே சூடாமணிஸ்-ததா || 32 ||*

*ஜ்வாலாமுகீ நகஜ்வாலா-மபேத்யா ஸர்வஸந்திஷு |*
*சுக்ரம் ப்ரஹ்மாணி மே ரக்ஷேச்-சாயாம் சத்ரேச்வரீ [ததா || 33 ||*

---

*கேசினியும் மயிர்க்கால்களில் கௌபேரியும், தோலை வாகீச்வரியும், இரத்தம், வீரியம், கொழுப்பு, மாம்ஸம், எலும்பு, மூளை இவற்றைப் பார்வதியும் ரக்ஷிக்கட்டும்.*

*32. குடல்களைக் காலராத்திரியும், பித்ததாதுவை முகுடேசுவரியும், ஆதாரக்கமலங்களில் பத்மாவதியும், கபதாதுவில் சூடாமணியும் ரக்ஷிக்கட்டும்.*

*33. நகங்களின் பிரகாசத்தை ஜ்வாலாமுகியும், எல்லா ஸந்திகளிலும் அபேத்யா தேவியும் ரக்ஷிக்கட்டும். பிரம்மாணி! எனது சுக்லத்தை ரக்ஷிப்பாய். நிழலைச் சத்ரேச்வரீ ரக்ஷிக்கட்டும்.*

अहंकारं मनो बुद्धि रक्ष मे धर्मचारिणि ।
प्रणापानौ तथा व्यान-समानोदान-मेव च        ॥ ३४ ॥

यशः कीर्ति च लक्ष्मीं च सदा रक्षतु चक्रिणी ।
गोत्र-मिन्द्राणि मे रक्षेत् पशून्मे रक्ष चण्डिके        ॥ ३५ ॥

पुत्रान् रक्षेन्-महालक्ष्मी-भार्यां रक्षतु भैरवी ।
मार्गं क्षेमंकरी रक्षे-द्विजया सर्वतः स्थिता        ॥ ३६ ॥

அஹங்காரம் மனோ புத்திம் ரக்ஷ மே தர்மசாரிணி |
ப்ராணாபானௌ ததா வ்யான-ஸமானோதான-மேவ ச

யச : கீர்த்திஞ் ச லக்ஷ்மீஞ் ச ஸதா ரக்ஷது சக்ரிணீ |
கோத்ர-மிந்த்ராணி மே ரக்ஷேத் பசூன்மே ரக்ஷ
[சண்டிகே 35 ||

புத்ரான் ரக்ஷேன் மஹாலக்ஷ்மீர்-பார்யாம் ரக்ஷது
[பைரவீ |
மார்க்கம் க்ஷேமங்கரீ ரக்ஷேத்-விஜயா ஸர்வத:ஸ்திதா ||

---

34. தர்மசாரிணி! எனது அஹங்காரத்தையும் மனதையும் புத்தியையும் ரக்ஷிப்பாய். அவ்வாறே பிராணனையும் அபானனையும் வியானனையும் ஸமானனையும் உதானனையும் ரக்ஷிப்பாய்.

35. புகழையும் கீர்த்தியையும் அழகையும் எப்போதும் சக்ரிணீ ரக்ஷிக்கட்டும். இந்திராணி! எனது கோத்திரத்தை ரக்ஷிப்பாய். சண்டிகே! எனது பசுக்களை ரக்ஷிப்பாய்.

36. மஹாலக்ஷ்மி புத்திரர்களை ரக்ஷிக்கட்டும். பைரவி மனைவியை ரக்ஷிக்கட்டும். க்ஷேமங்கரீ வழியை ரக்ஷிக்கட்டும். விஜயா எல்லாப்புறத்துமிருந்து எங்குங் காக்கட்டும்.

रक्षाहीनं तु यत्स्थानं वर्जितं कवचेन तु ।
तत्सर्वं रक्ष मे देवि जयन्ती पापनाशिनी ॥ ३७ ॥

पदमेकं न गच्छेत्तु यदीच्छेच्छुभ–मात्मनः ।
कवचेनावृतो नित्यं यत्र यत्र हि गच्छति ॥ ३८ ॥

तत्र तत्रार्थ-लाभश्च विजयः सर्वकामिकः ।
यं यं चिन्तयते कामं तं तं प्राप्नोति निश्चितम् ॥ ३९ ॥

*ரக்ஷாஹீனம் து யத் ஸ்தானம் வர்ஜிதம் கவசேன து |*
*தத் ஸர்வம் ரக்ஷ மே தேவி ஜயந்தீ பாபநாசினீ || 37 ||*

*பதமேகம் ந கச்சேத் து யதீச்சேச்-சுப-மாத்மன : |*
*கவசேனாவ்ருதோ நித்யம் யத்ர யத்ர ஹி கச்சதி || 38 ||*

*தத்ர தத்ரார்த்த-லாபச்ச விஜய ; ஸர்வகாமிக : |*
*யம் யம் சிந்தயதே காமம் தம் தம் ப்ராப்னோதி நிச்சிதம் ||*

---

*37.* தேவியே! எந்த இடம் கவசமில்லாமல், காக்கப் படாமல் உளதோ, அதை எல்லாம் ஜயந்தீ எனவும் பாப நாசினீ எனவும் பெயர் பெற்ற நீ காத்தருளல் வேண்டும்.

*38, 39.* தனக்கு உயர்நலனைக் கோருபவன் (தேவியின் ஸ்மரணமாகிற கவசமின்றி) ஒரு அடி கூடச் செல்லக் கூடாது. 'எப்போதும் கவசம் பூண்டவனாயின், எங்கெங்கு சென்றாலும் அங்கங்கு நாடிய பொருள் கைகூடுதலும் எல்லா எண்ணங்களின் சித்தியும் எய்துவான். எந்தெந்த விருப்பங் களை விரும்புகின்றானோ அவைகளை யெல்லாம் நிச்சயமாய் அடைவான்.

---

37. (ஒ.) ஸ்வபன்ஸ்-திஷ்டன் வ்ரஜன் மார்க்கே ப்ரலபன் போஜனே ரத: | கீர்த்தயன் ஸததம் தேவீம் ஸ வை முச்யேத பந்தனாத் || தேவீபுராணம்.

परमैश्वर्य-मतुलं प्राप्स्यते भूतले पुमान् ।
निर्भयो जायते मर्त्यः संग्रामे-ष्वपराजितः ॥ ४० ॥

त्रैलोक्ये तु भवेत् पूज्यः कवचेनावृतः पुमान् ।
इदं तु देव्याः कवचं देवानामपि दुर्लभम् ॥ ४१ ॥

यः पठेत् प्रयतो नित्यं त्रिसन्ध्यं श्रद्धयान्वितः ।
दैवी कला भवेत्तस्य त्रैलोक्ये चापराजितः ॥ ४२ ॥

*பரமைச்வர்ய-மதுலம் ப்ராப்ஸ்யதே பூதலே புமான் |*
*நிர்ப்பயோஜாயதே மர்த்ய:ஸங்க்ராமேஷ்-வபராஜித: ||*

*த்ரைலோக்யே து பவேத் பூஜ்ய : கவசேனுவ்ருத: புமான் |*
*இதம் து தேவ்யா ; கவசம் தேவானுமபி துர்லபம் || 41 ||*

*ய: படேத் ப்ரயதோ நித்யம் த்ரிஸந்த்யம் ச்ரத்தயான்வித : |*
*தைவீகலா பவேத் தஸ்ய த்ரைலோக்யே சாபராஜித: ||*

---

*40. அப்புருஷன் இப்புவியில் நிகரற்ற ஐசுவரியத்தை அடைவான். போரில் வெல்லப்படாதவனுகவும் பயமற்ற வனுகவும் அம்மனிதன் விளங்குவான்.*

*41. கவசத்தினுல் காக்கப்பட்ட புருஷன் மூவுலகிலும் பூஜிக்கத்தக்கவனுவான். தேவியின் இக்கவசம் தேவர்களாலும் அடைதற்கரிது.*

*42. தினந்தோறும் முச்சந்தியிலும் நியமத்துடனும் சிரத்தையுடனும் எவன் இதைப் படிக்கின்ருனே அவனுக்கு தைவீஸம்பத்து சித்திக்கும். மூவுலகிலும் அவன் பிறரால் ஜயிக்கப்படாதவனுவான்.*

அபம்ருத்யு—அக்னி, ஜலம், மின்னல், ஸர்ப்பம், முதலியவற்ருல் ஏற்படும் மரணம்.

जीवेद्वर्षशतं साग्र-मपमृत्यु-विवर्जितः ।
नश्यन्ति व्याधयः सर्वे लूता-विस्फोटकादयः ॥ ४३ ॥

स्थावरं जंगमं चापि कृत्रिमं चापि यद्विषम् ।
अभिचाराणि सर्वाणि मन्त्र-यन्त्राणि भूतले ॥ ४४ ॥

भूचराः खेचराश्चैव जलजाश्चोपदेशिकाः ।
सहजाः कुलजा माला डाकिनी शाकिनी तथा ॥ ४५ ॥

अन्तरिक्षचरा घोरा डाकिन्यश्च महाबलाः ।
ग्रह-भूत-पिशाचाश्च यक्ष-गन्धर्व-राक्षसाः ॥ ४६ ॥

*ஜீவேத்-வர்ஷசதம் ஸாக்ர-மபம்ருத்யு-விவர்ஜித ; |*
*நச்யந்தி வ்யாதய:ஸர்வே லூதா-விஸ்போடகாதய : ||*

*ஸ்தாவரம் ஜங்கமஞ் சாபி க்ருத்ரிமஞ் சாபி யத்-விஷம் |*
*அபிசாராணி ஸர்வாணி மந்த்ர-யந்த்ராணி பூதலே ||*

*பூசரா : கேசராச்சைவ ஜலஜாச்சோபதேசிகா : |*
*ஸஹஜா : குலஜா மாலா டாகினீ சாகினீ ததா || 45 ||*

*அந்தரிக்ஷசரா கோரா டாகின்யச்ச மஹாபலா : |*
*க்ரஹ-பூத-பிசாசாச்ச யக்ஷ-கந்தர்வ-ராக்ஷஸா : || 46 ||*

---

*43. அவன் துர்மரண பயமற்றவனாய் நூறாண்டும் அதற்கு மேலும் வாழ்வான். தோலிலும் ரத்தத்திலும் தோன்றும் வியாதிகள் எல்லாம் நாசமடையும்.*

*44. இப்புவியில் இயற்கையில் ஸ்தாவரங்களிலிருந்தும் ஜங்கமங்களிலிருந்தும் உண்டாகிய விஷமாயினும், செயற்கை விஷமாயினும், மந்திர தந்திரங்களால் செய்யப்பட்ட அபிசாரங்களாயினும் எல்லாம் (நாசமடையும்).*

*45. பூமியில் சஞ்சரிப்பவர்களும், ஆகாயத்தில் சஞ்சரிப்பவர்களும், நீரில் தோன்றுபவர்களும், உபதேச மாத்திரத்தால் தோன்றுபவர்களும், உடலுடன் தோன்றியவர்களும், குல தேவதைகளும், மாலாதேவதைகளும், அவ்வாறே டாகினீ, சாகினீ முதலிய தேவதைகளும் ;*

*46. கோரவடிவில் அந்தரிக்ஷத்தில் சஞ்சரிப்பவர்களும், மகாபலம் பொருந்திய டாகினிகளும், கிரஹ பூத பிசாசங்களும் யக்ஷ கந்தர்வ ராக்ஷஸர்களும் ;*

ब्रह्मराक्षस-वेतालाः कूष्माण्डा भैरवादयः ।
नश्यन्ति दर्शनात्तस्य कवचे हृदि संस्थिते　　॥ ४७ ॥

मानोन्नति-र्भवेद्राज्ञ-स्तेजीवृद्धिकरं परम् ।
यशसा वर्धते सोऽपि कीर्ति-मण्डित-भूतले　　॥ ४८ ॥

जपेत् सप्तशतीं चण्डीं कृत्वा तु कवचं पुरा ।
यावद्भूमण्डलं धत्ते सशैल-वनकाननम्　　॥ ४९ ॥

ப்ரஹ்மராக்ஷஸ-வேதாலா: கூஷ்மாண்டா பைரவாதய: |
நச்யந்தி தர்சனுத் தஸ்ய கவசே ஹ்ருதி-ஸம்ஸ்திதே ||

மானோன்னதிர்-பவேத்-ராஜ்ஞஸ்-தேஜோவ்ருத்திகரம் பரம் |
யசஸா வர்த்ததே ஸோऽபி கீர்த்தி-மண்டித-பூதலே ||

ஜபேத் ஸப்தசதீம் சண்டீம் க்ருத்வா து கவசம் புரா |
யாவத் பூமண்டலம் தத்தே ஸசைல-வன-கானனம் ||

47. பிரம்மராக்ஷஸர்களும் வேதாளங்களும், கூஷ்மாண்ட பைரவாதி துர்தேவதைகளும், கவசத்தை இருதயத்தில் தரித்த அவனைக் கண்ட மாத்திரத்தில் ஒடுங்கிப் போகின்றனர்.

48. அரசனிடமிருந்து வெகுமதியின் உயர்வும், சிறந்த திறமையின் ஏற்றமும் உண்டாகும். புவியெங்கும் கீர்த்தி பரவப் பெற்று அவன் புகழ் ஓங்கப் பெறுவான்.

49, 50. (ஸாதகன்) முதலில் கவசத்தை (ஜபம்) செய்து கொண்டு, பிறகு எழுநூறு மந்திரங் கொண்ட சண்டி ஸ்தோத்திரத்தை ஜபிக்கவேண்டும். மலைகளும் வனங்களும் காடுகளும்

तावत्तिष्ठति मेदिन्यां संततिः पुत्रपौत्रकी ।
देहान्ते परमं स्थानं यत् सुरैरपि दुर्लभम् ॥ ५० ॥

प्राप्नोति पुरुषो नित्यं महामाया-प्रसादतः ॥

इति श्रीवाराहपुराणे हरिहरब्रह्मविरचितं
देव्याः कवचं समाप्तम् ॥

*தாவத் திஷ்டதி மேதின்யாம் ஸந்ததி: புத்ரபௌத்ரகீ |*
*தேஹாந்தே பரமம் ஸ்தானம் யத் ஸுரைரபி துர்லபம் ||*

*ப்ராப்னோதி புருஷோ நித்யம் மஹாமாயா-ப்ரஸாதத: |*

இதி ஸ்ரீ வாராஹபுராணே ஹரிஹரப்ரஹ்மவிரசிதம்
தேவ்யா: கவசம் ஸமாப்தம்

---

*கொண்ட இப் பூமண்டலம் உள்ளவரை இவ்வுலகில் அவனுடைய புத்திர பௌத்திர ஸந்ததி நீடித்து நிலைபெறும். உடல் வாழ்க்கையின் முடிவில் தேவர்களுமடைதற்கரிய உயர்ந்த அழியாப்பதவியை அப்புருஷன் மாஹமாயையின் பிரஸாதத்தால் எய்துவான்.*

**இங்ஙனம் ஸ்ரீவாராஹ புராணத்தில் பிரம்ம விஷ்ணு மகேசுவரர்களால் அருளப்பெற்ற தேவியின் கவசம் முற்றிற்று.**

---

50. (ஒ.) ய ஏதாம் மாயாசக்திம் வேத, ஸ ம்ருத்யும் ஜயதி, ஸ ஆத்மானம் தரதி, ஸோऽம்ருதத்வஞ்ச கச்சதி | சுருதி.

'கவசேऽஸ்மின் ஸார்த்த--பஞ்சாசத்-ஸங்க்யாக-ச்லோக ஸங்க்ரஹ:' ஸ.ஸ.

# अर्गला-स्तोत्रम् ॥ २ ॥

## ॥ न्यासः ॥

अस्य श्री अर्गलास्तोत्र-महामन्त्रस्य स्वर्णाकर्षण-भैरव ऋषिः। अनुष्टुप् छन्दः। श्रीमहालक्ष्मी चण्डिका देवता। अं बीजं, गं शक्तिः, लं कीलकम्। श्रीमहालक्ष्मी-चण्डिका-प्रसादसिद्धयर्थे जपे विनियोगः। मार्कण्डेय उवाच—

जयन्ती मंगला काली भद्रकाली कपालिनी।
दुर्गा क्षमा शिवा धात्री स्वाहा स्वधा नमोऽस्तु ते ॥ १ ॥

## 2. அர்க்கலா-ஸ்தோத்ரம்

ந்யாஸ:—*அஸ்ய ஸ்ரீ அர்கலா-ஸ்தோத்ர-மஹா மந்த்ரஸ்ய ஸ்வர்ணாகர்ஷண-பைரவருஷி; | அனுஷ்டுப் சந்த: | ஸ்ரீ மஹாலக்ஷ்மீ சண்டிகா தேவதா | அம்-பீஜம், கம்-சக்தி:, லம்-கீலகம் | ஸ்ரீ மஹாலக்ஷ்மீ சண்டிகா ப்ரஸாத ஸித்த்யர்தே ஜபே விநியோக: ||*

*மார்க்கண்டேய உவாச—*

*ஜயந்தீ மங்கலா காலீ பத்ரகாலீ கபாலினீ |*
*துர்கா க்ஷமா சிவா தாத்ரீ ஸ்வாஹா ஸ்வதா நமோ ऽஸ்து தே || 1 ||*

---

## 2. அர்க்கலா-ஸ்தோத்ரம்

*மார்க்கண்டேயர் கூறியது—*

*1. ஜயந்தீ, மங்கலா, காளீ[1], பத்ரகாளீ, கபாலினீ, துர்க்கா, க்ஷமா, சிவா, தாத்ரீ, ஸ்வாஹா, ஸ்வதா எனப் பெயர் பெற்ற உனக்கு நமஸ்காரம்.*

---

1. காளீ—பிரளயகாலத்தில் காலத்தையும் விழுங்குபவள்.

துர்க்கா—அடைதற்கரியவள்.

க்ஷமா—அடியார்களுடைய குற்றங்களைப் பொறுப்பவள்.

சிவா—(ஒ.) சின்மாத்ராச்ரய--மாயாயா: சக்த்யாகாரே த்விஜோத்தமா: | அனுப்ரவிஷ்டா யா ஸம்விந்-நிர்விகல்பா ஸ்வயம்ப்ரபா || ஸதாகாரா ஸதானந்தா ஸம்ஸாரோச்சேத-காரிணீ | ஸா சிவா பரமா தேவீ சிவாபின்ன சிவங்கரீ ||

ஸூதஸம்ஹிதை

मधुकैटभ-विद्राविविधातृ-वरदे नमः ।
रूपं देहि जयं देहि यशो देहि द्विषो जहि ॥ २ ॥

महिषासुर-निर्नाशि-विधात्रि वरदे नमः । रूपं ॥ ३ ॥

वन्दितांघ्रि-युगे देवि देव-सौभाग्य-दायिनि । रूपं ॥ ४ ॥

*மது-கைடப-வித்ராவி விதாத்ரு-வரதே நம ; | [ஜஹி ||*
*ரூபம் தேஹி ஜயம் தேஹி யசோதேஹி த்விஷோ*

*மஹிஷாஸுர-நிர்நாச-விதாத்ரி வரதே நம : | ரூபம் ||*

*வந்திதாங்கரி-யுகே தேவி தேவ-ஸௌபாக்யதாயினி !*
*ரூபம் || 4 |*

---

*2. மதுகைடபர்களை நாசஞ் செய்தவளே ! பிரம்மாவிற்கருள் புரிந்தவளே ! (உனக்கு) நமஸ்காரம். (எனக்கு) ரூபத்தையளிப்பாய், ஜயத்தை அளிப்பாய், கீர்த்தியை அளிப்பாய், (என்) சத்துருக்களை அழிப்பாய்.*

*3. மஹிஷாசுர நாசத்தைச் செய்து காத்தவளே ! (பிரம்மாவிற்கு) வரமளித்தவளே ! உனக்கு நமஸ்காரம்.......*

*4. (உலகனைத்தாலும்) வணங்கப்பெற்ற பாதங்களையுடையவளே ! தேவர்களுக்கு (சத்ருஜயம் எனும்) ஸௌபாக்கியத்தை யளிப்பவளே !*

---

**தாத்ரி**—அனைத்தையும் தாங்குபவள்.

1. (ஒ.) அஹம் ருத்ரேபிர்—வஸுபிச்சராம்—யஹ-மாதித்யை—ருத விச்வ தேவை : || தேவி ஸூக்தம்

2. மதுகைடப வதத்திற்காகப் பிரம்மாவால் துதிக்கப்பட்டு பிரம்மாவிற்கு அருள் சுரந்தவள்.

**ரூபம் தேஹி ஜயம் தேஹி** — 'ஜயத்யனேன பரமாத்ம-ஸ்வருபமிதி | அதவா ஜயோ வேதஸம்ருதிராசி: | 'ஸஹ நௌ யச' இதி ச்ருதி—ப்ரஸித்தம் தத்வஜ்ஞான-ஸம்பாதன ஜன்யம் யசஸ்.தத்தேஹி | த்விஷ : காமக்ரோத-லோபாதீன் சத்ருன் ஜஹி, நாசயேத்யர்த்த : |' ஸ. ஸ.

रक्तबीजवधे देवि चण्डमुण्डविनाशिनि । रूपं ॥ ५ ॥
अचिन्त्य-रूप-चरिते सर्वशत्रु-विनाशिनि । रूपं ॥ ६ ॥
नतेभ्यः सर्वदा भक्त्या चण्डिके प्रणताय मे । रूपं ॥ ७ ॥
स्तुवद्भ्यो भक्तिपूर्वं त्वां चण्डिके व्याधिनाशिनि ।
रूपं ॥ ८ ॥
चण्डिके सततं ये त्वा-मर्चयन्तीह भक्तितः । रूपं ॥ ९ ॥

ரக்தபீஜ-வதே தேவி சண்ட-முண்ட-விநாசினி | ரூபம் ||
அசிந்த்ய-ரூப-சரிதே ஸர்வசத்ரு-விநாசினி | ரூபம் ||
நதேப்ய: ஸர்வதா பக்த்யா சண்டிகே ப்ரணதாய மே |
ரூபம் || 7 ||
ஸ்துவத்ப்யோ பக்திபூர்வம் த்வாம் சண்டிகே வ்யாதி-
நாசினி ரூபம் ||
சண்டிகே ஸததம் யே த்வா-மர்ச்சயந்தீஹ பக்தித:
ரூபம் || 9 ||

---

5. ரக்த பீஜனை வதைத்த தேவியே! சண்டமுண்டர்களை நாசஞ்செய்தவளே!.........

6. எண்ணுதற்கரிய ரூபமும் சரித்திரமும் படைத்தவளே! எல்லா சத்துருக்களையும் நாசம் செய்பவளே!......

7. (பரப்ரஹ்மஸ்வரூபிணியான) சண்டிகே! எப்போதும் பக்தியுடன் வணங்குவோர்க்கும், உன்னை நமஸ்கரிக்கும் எனக்கும் ரூபத்தையளிப்பாய், ஜயத்தையளிப்பாய், கீர்த்தியை யளிப்பாய், (என்) சத்துருக்களை அழிப்பாய்.

8. சண்டிகே! வியாதியை நாசம் செய்பவளே! பக்தியை முன்னிட்டு உன்னைத் துதிப்போர்க்கு ரூபத்தை யளிப்பாய், ஜயத்தை யளிப்பாய்.........

9. சண்டிகே! எவர்கள் எப்போதும் உன்னை பக்தியுடன் அர்ச்சிக்கின்றார்களோ அவர்களுக்கு ரூபத்தை யளிப்பாய், ஜயத்தை யளிப்பாய்.........

---

6. (ஒ.) 'யதோ வாசோ நிவர்த்தந்தே' தை. உப. 2. 9

देहि सौभाग्य-मारोग्यं देहि देवि परं सुखम् । रूपं ॥ १० ॥
विधेहि द्विषतां नाशं विधेहि बल-मुच्चकैः । रूपं ॥ ११ ॥
विधेहि देवि कल्याणं विधेहि विपुलां श्रियम् । रूपं ॥१२॥
विद्यावन्तं यशस्वन्तं लक्ष्मीवन्तं जनं कुरु । रूपं ॥ १३ ॥
प्रचण्ड-दैत्य-दर्पघ्ने चण्डिके प्रणताय मे । रूपं ॥ १४ ॥

தேஹி ஸௌபாக்ய-மாரோக்யம் தேஹி தேவி பரம் ஸுகம் | ரூபம் ||

விதேஹி த்விஷதாம் நாசம் விதேஹி பல-முச்சகை: | ரூபம் || 11 ||

விதேஹி தேவி கல்யாணம் விதேஹி விபுலாம் ச்ரியம் | ரூபம் || 12 ||

வித்யாவந்தம் யசஸ்வந்தம் லக்ஷ்மீவந்தம் ஜனம் குரு | ரூபம் || 13 ||

ப்ரசண்ட-தைத்ய-தர்ப்பக்னே சண்டிகே ப்ரணதாய மே | ரூபம் ||

---

10. தேவி! ஸௌபாக்கியமும் ஆரோக்கியமும் அளிப்பாய். (பிரம்மானந்தமாகிய) பரமசுகத்தையுமளிப்பாய்......

11. சத்துருக்களின் நாசத்தையளிப்பாய். நிரதிசயமான பலத்தையு மளிப்பாய்.........

12. தேவி! மங்களத்தை யளிப்பாய். பரந்த செல்வத்தை யளிப்பாய்.........

13. கல்விமானுகவும், புகழ்பெற்றவனுகவும், செல்வம் படைத்தவனுகவும், இம்மனிதனைச் செய்வாய்.........

14. பிரபலமான தைத்தியர்களின் கர்வத்தை யழித்தவளே! சண்டிகே! உன்னை வணங்கும் எனக்கு ரூபத்தை யளிப்பாய், ஜய்த்தை யளிப்பாய்.........

---

13. வித்யாவந்தம்—ப்ரஹ்மவித்யாவந்தம்.

चतुर्भुजे चतुर्वक्त्र-संस्तुते परमेश्वरि । रूपं ॥ १५ ॥

कृष्णेन संस्तुते देवि शश्वद्भक्त्या तथांबिके । रूपं ॥१६॥

हिमाचलसुतानाथ-पूजिते परमेश्वरि । रूपं ॥ १७ ॥

सुरासुर-शिरोरत्न-निघृष्ट-चरणेऽम्बिके । रूपं ॥ १८ ॥

इन्द्राणी-पति-सद्भाव-पूजिते परमेश्वरि । रूपं ॥ १९ ॥

*சதுர்புஜே சதுர்வக்த்ர-ஸம்ஸ்துதே பரமேச்வரி | ரூபம் ॥ 15 ॥*

*க்ருஷ்ணேன ஸம்ஸ்துதே தேவி சச்வத் பக்த்யா ததாம்பிகே | ரூபம் ॥*

*ஹிமாசலஸுதாநாத-பூஜிதே பரமேச்வரி | ரூபம் ||*

*ஸுராஸுர-சிரோரத்ன-நிக்ருஷ்ட-சரணேऽம்பிகே — ரூபம் ॥ 18*

*இந்த்ராணீபதி-ஸத்பாவ-பூஜிதே பரமேச்வரி | ரூபம் ||*

---

15. நான்கு கைகளையுடையவளே ! நான்முகப்பிரம்மாவால் துதிக்கப்பெற்றவளே ! பரமேசுவரி !.........

16. தேவி ! அம்பிகே ! இடைவிடாது பக்தியுடன் கிருஷ்ணனால் துதிக்கப்பெற்றவளே !.........

17. பார்வதீநாதனால் பூஜிக்கப்பட்டவளே ! பரமேசுவரி !.........

18. தேவர்களும் அசுரர்களும் தங்கள் முடியிலுள்ள ரத்னங்களால் தொட்டு வணங்கும் சரணங்களை யுடையவளே! அம்பிகே !.........

19. இந்திராணியின் பதியால் உள்ளன்புடன் பூஜிக்கப் பெற்றவளே ! பரமேசுவரி !.........

---

15. சதுர்ப்புஜே—சதுர்வர்க்க-தாரணார்த்தம் சத்வாரோ புஜா: |

19. இந்த்ராணீபதிநா ஸத்பாவேன பூஜிதா | அதவா இந்த்ராண்யா: பதிஸத்பாவஸ்ய பத்யு-ரிந்த்ரஸ்ய ஸத்தாயா வித்யமானதாயா: ஜ்ஞானார்த்தம் பூஜிதா (இந்திரன் விருத்திராசுரவதத்துக்குப்பின் தாமரைத் தண்டில் ஒளிந்து வசிக்க நேரிட்டபோது தேவியை ஆராதித்து இந்திராணி இந்திரன் வசித்த இடத்தை அறிந்தாள்).

देवि प्रचण्ड-दोर्दण्ड-दैत्य-दर्प-विनाशिनि । रूपं ॥ २० ॥

देवि भक्तजनोद्दाम-दत्तनन्दोदयेऽम्बिके । रूपं ॥ २१ ॥

पत्नीं मनोरमां देहि मनो-वृत्तानुसारिणीम् ।
तारिणीं दुर्ग-संसार-सागरस्य कुलोद्भवाम् ॥ २२ ॥

*தேவி ப்ரசண்ட-தோர்தண்ட-தைத்யதர்ப்ப-விநாசினி |
ரூபம் || 20 ||*

*தேவி பக்தஜனோத்தாம-தத்தானந்தோதயேऽம்பிகே |
ரூபம் || 21 || [ணீம் ||*

*பத்னீம் மனோரமாம் தேஹி மனோவ்ருத்தானுஸாரி-
தாரிணீம் துர்க-ஸம்ஸார-ஸாகரஸ்ய குலோத்பவாம் ||*

---

*20. தேவி! கொடிய தோள்வலி படைத்த தைத்தியர்களின் கர்வத்தை நாசம் செய்தவளே!.........*

*21. தேவி! பந்தங்களற்ற பக்தர்களுக்கு பரமானந்த மூலமான முக்தியை யளிப்பவளே! அம்பிகே!*

*22., மனதுக்கினியவளாயும், மனதின் போக்கை அறிந்து நடப்பவளாயும், கடத்தற்கரிய ஸம்ஸாரஸாகரத்தைக் கடத்தற்கு உதவிபுரிபவளாயும், நற்குலத்துதித்தவளாயு முள்ள மனைவியை யளிப்பாய்.*

---

21. 'பக்தஜனேஷு யே உத்தாமானோ நிரர்க்கலபக்தி-மந்த: தேப்யோ தத்த ஆனந்தோதயோ மோக்ஷோ யயா'.

22. மார்க்கண்டேய புராணத்தில் கூறப்படும் மதாலஸா போன்றவளும் யோகவாசிஷ்டத்தில் கூறப்படும் சூடாலை போன்றவளுமான உத்தம ஞானம் படைத்த மனைவி.

इदं स्तोत्रं पठित्वा तु महास्तोत्रं पठेन्नरः ।
स तु सप्तशती-संख्या-वर-माप्नोति संपदः ॥ २३ ॥

इति श्रीमार्कण्डेयपुराणे अर्गलास्तोत्रम् समाप्तम् ।

*இதம் ஸ்தோத்ரம் படித்வா து மஹாஸ்தோத்ரம் படேந்நர: |*
*ஸ து ஸப்தசதீ-ஸங்க்யா-வர-மாப்னோதி ஸம்பத: | 23 ||*

இதி ஸ்ரீ மார்க்கண்டேய-புராணே அர்கலா ஸ்தோத்ரம் ஸமாப்தம் ||

---

*23. இந்த ஸ்தோத்திரத்தைப் படித்துவிட்டு மஹா ஸ்தோத்திரமாகிய தேவீ மாஹாத்மியத்தை ஸாதகனாகிய மனிதன் படிக்கவேண்டும். அது ஸப்தசதீபாராயணக் கணக்கில் அடங்கியது. அதனால் சிறந்த பலன் கைகூடும். ஸகல ஸம்பத்துக்களையும் அடைவான்.*

**இங்ஙனம் மார்க்கண்டேய புராணத்தில் அர்க்கலா ஸ்தோத்ரம் முற்றிற்று.**

---

23. அர்க்கலா— ஸித்தி-ப்ரதிபந்தகம் பாப-மர்க்கலா - ஸத்ருசத்வா-தர்க்கலா | தந்நாசக-ஸ்தோத்ரஸ்யாபி லக்ஷணயாzர்க்கலேதி ஸம்ஜ்ஞா'.... (த்ரயோவிம்சதி ஸங்க்யாகும் ச்லோகாஹ-மந்த்ர ஸங்க்ரஹ:) ஸ.ஸ.

# कीलकम् ॥ ३ ॥

## ॥ न्यासः ॥

अस्य श्री कीलकस्तोत्र महामन्त्रस्य । विशुद्धज्ञान ऋषिः । अनुष्टुप् छन्दः । श्री चण्डिका देवता । सां बीजं, क्लीं शक्तिः, क्लूं कीलकम् । श्रीचण्डिका-प्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः ॥

विशुद्धज्ञान-देहाय त्रिवेदी-दिव्य-चक्षुषे ।
श्रेयः-प्राप्ति-निमित्ताय नमः सोमार्ध-धारिणे ॥ १ ॥

सर्व-मेत-द्विजानीयान्-मन्त्राणा-मभिकीलकम् ।
सोऽपि क्षेम-मवाप्नोति सततं जाप्य-तत्परः ॥ २ ॥

## 3. கீலகம்

நியாஸ :— *அஸ்ய ஶ்ரீ கீலக-ஸ்தோத்ர-மஹாமந்த்ரஸ்ய விசுத்தஜ்ஞானருஷி : । அனுஷ்டுப் சந்த : । ஶ்ரீ சண்டிகா தேவதா । ஸாம்-பீஜம், க்லீம் சக்தி ; க்லூம் கீலகம் । ஶ்ரீ சண்டிகா - ப்ரஸாத - ஸித்தியர்த்தே ஜபே விநியோக : ॥*

*விசுத்தஜ்ஞான - தேஹாய த்ரிவேதீ - திவ்ய - சக்ஷுஷே ।*
*ச்ரேய:-ப்ராப்தி-நிமித்தாயநம: ஸோமார்த்த-தாரிணே ॥*
*ஸர்வமேதத்-விஜாநீயான்-மந்த்ராணா-மபி-கீலகம் ।*
*ஸோऽபி க்ஷேம-மவாப்னோதி ஸததம் ஜாப்ய-தத்பர: ॥*

---

## 3. கீலகம்

1. விசுத்தஞானமே சரீரமாயும், மூன்று வேதங்களே தெய்வீகக் கண்ணாயும் கொண்டு உயர் நலத்தைக் கூட்டுவித்தற்குக் காரணரூபியாய்ப் பாதிச் சந்திரனைத் தலையிலணிந்து விளங்கும் பரமசிவனுக்கு நமஸ்காரம்.

2. எல்லா மந்திரங்களுக்கும் இதை (ஸப்தசதீ பாராயணத்தை) 'அபிகீலகம்' என அறியவேண்டும். (எந்த மந்திரத்தையும்) இடைவிடாது ஒருமனத்தினனாய் ஜபிக்கும் ஒருவன் க்ஷேமத்தையடைகின்றான்.

---

2. அபிகீலகம்— 'ஸர்வமந்த்ரஸித்தி - ப்ரதிபந்தக - கீலக-நாசகத்வாத் லக்ஷணயா ஸப்தசதீ-ஸ்தோத்ர-மபிகீலகம். ஸ. ஸ.

सिद्धयन्त्युच्चाटनादीनि वस्तूनि सकलान्यपि ।
एतेन स्तुवतां देवी स्तोत्रमात्रेण सिध्यति ॥ ३ ॥
न मन्त्रो नौषधं तत्र न किंचिदपि विद्यते ।
विना जाप्येन सिध्येत सर्व-मुच्चाटनादिकम् ॥ ४ ॥
समग्राण्यपि सेत्स्यन्ति लोकशंका-मिमां हरः ।
कृत्वा निमन्त्रयामास सर्वमेव-मिदं शुभम् ॥ ५ ॥

ஸித்த்யந்த்-யுச்சாடனாதீனி வஸ்தூனி ஸகலான்யபி |
ஏதேன ஸ்துவதாம் தேவீ ஸ்தோத்ர-மாத்ரேண
ஸித்யதி ||

ந மந்த்ரோ நௌஷதம் தத்ர ந கிஞ்சிதபி வித்யதே |
விநா ஜாப்யேன ஸித்யேத ஸர்வ-முச்சாடனாதிகம் ||

ஸமக்ராண்யபி ஸேத்ஸ்யந்தி லோகசங்கா-மிமாம்
ஹர: |
க்ருத்வா நிமந்த்ரயாமாஸ ஸர்வமேவ-மிதம் சுபம் ||

3. (அங்ஙனம் ஜபிப்பவனுக்கு) உச்சாடனம் முதலியவை ஸித்திக்கின்றன. (கிடைத்தற்கரிய) எல்லாப் பொருள்களும் கிடைக்கின்றன. (ஆனால் மந்திர ஜபமில்லாமல் தேவீ மஹாத்மியமாகிய) இதனால் துதிப்பவர்க்கும் ஸ்தோத்திரமாத்திரத்தாலேயே தேவி சித்தி யளிக்கின்றாள்.

4. அப்புருஷனுக்கு (காரியசித்திக்கு) மந்திரமோ மூலிகையோ வேறு எதுவோ வேண்டியதில்லை. ஜபமில்லாமலேயே உச்சாடனம் முதலிய எல்லாம் சித்திக்கும்.

5. இது பரிபூர்ண பலனை யளிப்பது. (பலமந்திரங்களில் எது சிறந்தது என்று) உலகில் ஏற்படும் சந்தேகமாகிய இதைக் கருதியே பரமசிவன் இதுவே எல்லா நன்மைகளையுமளிப்பதாக இருக்கட்டுமென்று (இவ்வுலகிற்கு இதை) அழைத்தருளினார்.

स्तोत्रं वै चण्डिकायास्तु तच्च गुह्यं चकार सः ।
समाप्ति-र्न च पुण्यस्य तां यथावन्नियन्त्रणाम् ॥ ६ ॥
सोऽपि क्षेम-मवाप्नोति सर्वमेव न संशयः ।
कृष्णायां वा चतुर्दश्या-मष्टम्यां वा समाहितः ॥ ७ ॥
ददाति प्रतिगृह्णाति नान्यथैषा प्रसीदति ।
इत्थं रूपेण कीलेन महादेवेन कीलितम् ॥ ८ ॥

ஸ்தோத்ரம் வை சண்டிகாயாஸ்து தச்ச குஹ்யம்
சகார ஸ: ¦
ஸமாப்திர்-ந ச புண்யஸ்ய தாம் யதாவந்-நியந்த்ரணும் ॥
ஸோऽபி க்ஷேம-மவாப்னோதி ஸர்வமேவ ந ஸம்சய: ¦
க்ருஷ்ணயாம் வா சதுர்தச்யா-மஷ்டம்யாம் வா ஸமா-
ஹித; ॥ 7 ॥
ததாதி ப்ரதிக்ருஹ்ணுதி நான்யதைஷா ப்ரஸீததி ¦
இத்தம் ரூபேண கீலேன மஹாதேவேன கீலிதம் ॥

---

6. சண்டிகையின் ஸ்தோத்திரமாகிய இதை ரகசிமாய்ப் போற்றத்தக்கதாய் அவர் செய்தருளினுர், அதனுல் உண்டாகும் புண்ணியத்திற்கு முடிவே இல்லை என்ற அந்த நிர்ணயத்தை உள்ளபடி உணர்தல் வேண்டும்.

7, 8. (வேறு மந்திர ஜபம் செய்பவனும் தேவீமாஹாத்மியத்தைப் பாராயணம் செய்பவனுயின்) அவனும் எல்லா நன்மைகளையும் சந்தேகமின்றி அடைவான். கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியிலோ அஷ்டமியிலோ ஒருமைப்பட்ட மனத்துடன் எந்த ஸாதகன் (நியாய வழியில் சம்பாதித்த தன் பொருளை தேவியிடம்) ஸமர்ப்பிக்கின்றுனே, (பின்பு உலக வாழ்க்கையின் பொருட்டு அவசியமானதை தேவியளித்ததென) மீண்டும் பெற்றுக்கொள்ளுகின்றுனே அவனிடமே தேவி ஸந்தோஷ

---

8. ததாதி ப்ரதிக்ருஹ்ணுதி— "உபாஸகோ நிஜம் ஸர்வம் தனம் ந்யாயேனேபார்ஜிதம் தேவ்யை ததாதி ஸமர்ப்பயதி ஹே தேவி இத ஆரப்ய இதம் ஸர்வம் தனம் மதீயம் துப்யம் மயா தத்த-மஸ்த்விதி ஸமர்ப்பயதி. பச்சாத் ஸம்ஸார-யாத்ரா-நிர்வாஹார்த்தம் க்ருஹாணேதம் த்ரவ்யம் மத் ப்ரஸாத-பூதமிதி

यो निष्कीलां विधायैनां नित्यं जपति संस्फुटम् ।
स सिद्धः स गणः सोऽपि गन्धर्वो जायतेऽवने ॥ ९ ॥
न चैवाप्यटत-स्तस्य भयं क्वापीह जायते ।
नाल्पमृत्यु-वशं याति मृतो मोक्ष-मवाप्नुयात् ॥ १० ॥

யோ நிஷ்கீலாம் விதாயைனும் நித்யம் ஜபதி ஸம்ஸ்புடம் |
ஸ ஸித்த: ஸ கண: ஸோऽபி கந்தர்வோ ஜாயதேऽவனே ||

நசைவாப்யடதஸ்-தஸ்ய பயம் க்வாபீஹ ஜாயதே |
நால்ப-ம்ருத்யு-வசம் யாதி ம்ருதோ மோக்ஷ-மவாப்-னுயாத் || 10 ||

---

மடைகின்றாள். அவளை மகிழ்விக்க வேறு வழியில்லை. இந்த மாதிரிப் பூட்டினல் (சித்திமார்க்கம்) மகாதேவரால் பூட்டி வைக்கப்பட்டுள்ளது.

9. (மேற்கூறிய முறையில்) எவன் தடையை நீக்கிவிட்டு (ஸப்தசதீ ஸ்தோத்திரமாகிய) இதை நாள்தோறும் தெளிவுபட ஜபம் செய்கின்றானே அவன் சித்தனாகவும், தேவியின் அடியார் கூட்டத்திற் சேர்ந்தவனாகவும், கந்தர்வனாகவும், பிறரைக் காக்கவல்லவனாகவும் ஆவான்.

10. அவன் எங்கும் சஞ்சரிப்பவனாயினும், எங்கிருந்தும் அவனுக்கு பயம் உண்டாகாது; அற்பாயுளில் மரணமடைய மாட்டான்; மரணத்துக்குப்பின் மோக்ஷத்தை யடைவான்.

---

தேவ்யனுஜ்ஞாம் மனஸா க்ருஹீத்வா தத்-த்ரவ்யம் ப்ரஸாத புத்யா ப்ரதிக்ருஹ்ணாதி, க்ருஹீத்வா ச தர்மசாஸ்த்ரோக்த-மார்க்கேண தஸ்ய வ்யயம் குர்வந் நிரந்தரம் தேவ்யதீனோ பவதி, தஸ்யைவா ஸப்தசதீ ப்ரஸன்னா பவதி நான்யதா.'' அயஞ்ச கிலகஸ்யார்த்தோ ரஹஸ்யாகமே குரு-கிலக-படலே ப்ரதர்சித: || ஸ. ஸ.

உபாஸகன் தன்னால் நியாயமான வழியில் அடையப்பட்ட தனத்தை தேவிக்கு அர்ப்பணம் செய்து ஏகாக்ரசித்தனாய்ப் பிரார்த்திக்க வேண்டும். இதுதான் நிஷ்கீலனம் அல்லது சாபோத்தாரம்.

ज्ञात्वा प्रारभ्य कुर्वीत ह्यकुर्वाणो विनश्यति ।
ततो ज्ञात्वैव संपन्नमिदं प्रारभ्यते बुधैः ॥ ११ ॥

सौभाग्यादि च यत् किंचिद्दृश्यते ललनाजने ।
तत्सर्वं तत्प्रसादेन तेन जाप्य-मिदं शुभम् ॥ १२ ॥

शनैस्तु जाप्यमानेऽस्मिन् स्तोत्रे संपत्तिरुच्चकैः ।
भवत्येव समग्रापि ततः प्रारभ्यमेव तत् ॥ १३ ॥

*ஜ்ஞாத்வா ப்ராரப்யகுர்வீத ஹ்யகுர்வாணோவிநச்யதி |*
*ததோ ஜ்ஞாத்வைவ ஸம்பன்ன-மிதம் ப்ராரப்யதே*
*புதை: ॥ 11 ॥*

*ஸௌபாக்யாதி ச யத்கிஞ்சித்-த்ருச்யதே லலனாஜனே |*
*தத்ஸர்வம் தத்ப்ரஸாதேன தேன ஜாப்ய-மிதம்-சுபம் ॥*

*சனைஸ்து ஜாப்யமானேऽஸ்மின் ஸ்தோத்ரே ஸம்-*
*பத்திருச்சகை: |*
*பவத்யேவ ஸமக்ராபி தத: ப்ராரப்யமேவ தத் ॥ 13 ॥*

*11. (நிஷ்கீலக முறையை) அறிந்து கொண்டு (ஸப்தசதீ பாடத்தை) ஆரம்பிக்கவேண்டும். அதை அனுஷ்டிக்காதவன் வீணாவான். ஆகையால் இதை அறிந்த பின்னரே குறை வற்ற இந்த ஸ்தோத்ர பாடம் புத்திமானால் ஆரம்பிக்கப்பட வேண்டும்.*

*12. ஸ்திரீகளிடம் ஸௌபாக்கியம் முதலிய எதெது காணப்படுகிறதோ அது எல்லாம் தேவியின் அருளாலேயே ஏற்படுவதாகையாலும் பரம மங்களகரமான இந்த ஸ்தோத்திரம் ஜபித்தற்குரியது.*

*13. மெதுவாக ஜபம் செய்தாலும் பயன் உண்டு எனினும் உரக்கப் பாராயணம் செய்வதாலேயே பரிபூர்ண பலன் ஏற்படுமாதலால் அங்ஙனமே அது ஆரம்பித்து அனுஷ்டிக்கப்படவேண்டும்.*

ऐश्वर्यं यत्प्रसादेन सौभाग्यारोग्य-संपदः ।
शत्रु-हानिः परो मोक्षः स्तूयते सा न किं जनैः ॥ १४ ॥

इति कीलकस्तोत्रं समाप्तम्

*ஐச்வர்யம் யத் ப்ரஸாதேன ஸௌபாக்யாரோக்ய-ஸம்பத: |*
*சத்ரு-ஹானி: பரோ மோக்ஷ: ஸ்தூயதே ஸா ந கிம் ஜனை: || 14 ||*

இதி கீலகஸ்தோத்ரம் ஸமாப்தம்

*14.* ஐசுவரியம், ஸௌபாக்கியம், ஆரோக்கியம், ஸம்பத்து, சத்துரு ஜயம், உயர்ந்த மோக்ஷம் எல்லாம் எந்தப் பரதேவதையின் அருளால் கிட்டுகின்றனவோ அவள் ஏன் மக்களால் துதிக்கப்படுவதில்லை?

இங்ஙனம் கீலக ஸ்தோத்திரம் முற்றிற்று

14. 'ச்லோகச்-சதுர்தச வாத்ர கீலகே ஸம்ப்ரதிஷ்டிதா:'. ஸ. ஸ.

# रात्रि-सूक्तम् ॥ ४ ॥

## ॥ न्यासः ॥

रात्रीति सूक्तस्य । कुशिक ऋषिः । गायत्रीछन्दः । रात्रिर्देवता । श्री जगदंबा-प्रीत्यर्थे जपे विनियोगः ॥

ओं रात्री व्यख्यदायती पुरुत्रा देव्य१क्षभिः । विश्वा अधि श्रियोऽधित ॥

## 4. ராத்ரி-ஸூக்தம்

ந்யாஸ: || *ராத்ரீதி ஸூக்தஸ்ய குசிக ருஷி: | காயத்ரீ ச்சந்த: | ராத்ரிர்தேவதா | ஸ்ரீ ஜகதம்பா ப்ரீத்யர்த்தே ஜபே விநியோக: ||*

*ஓம் ராத்ரீ வ்யக்யதாயதீ புருத்ரா தேவ்ய(அ)க்ஷபி: | விச்வா அதிச்ரியோதித || 1 ||*

---

## 4. ராத்ரி-ஸூக்தம்

*1. ஓம். ராத்திரி தேவியானவள் எழுந்தருளுகின்றாள். இந்திரிய சக்திகளால் எல்லா இடங்களிலுமுள்ள எல்லாப் பெருமைகளையும் எல்லாச் செயல்களையும் பார்க்கின்றாள். எல்லாப் பெருமைகளையும் தரிக்கின்றாள்.*

---

ராத்ரி:—'ப்ரஹ்மமாயாத்மிகா ராத்ரி: பரமேச-லயாத்மிகா | தததிஷ்டாத்ரு-தேவீ து புவனேசீ ப்ரகீர்த்திதா' || தேவீ புராணம்

ராத்ரி ஸூக்தத்திற்கு ஸாயணாசாரியரும், தேவிபாகவத டீகாகாரரான நீலகண்ட ஸ்வாமியும் பாஷ்யம் எழுதியுள்ளார்கள். இதற்கு 'வனதுர்க்கா ஸூக்தம்' என்றும் பெயர்.

இதை ஸ்வரத்துடன் அத்தியயனம் செய்யாதவர்கள் இதற்குப் பதிலாக 'விச்வேச்வரீம் ஜகத்தாத்ரீம்' (1-70) முதல் 'ஹந்து-மேதௌ மஹாஸுரௌ (1-87) என்பது வரை படிப்பது வழக்கம். இது பௌராணிக ராத்ரி ஸூக்தம்.

இரவில் கெட்ட கனவு கண்டால் காலையில் எழுந்ததும் ராத்ரி ஸூக்த மந்திரத்தால் பாயஸான்னத்தை ஹோமம் செய்ய வேண்டும் என ஒரு பிரயோகம் ஆரணியகத்தில் கூறப்பட்டுளது.

1. ஆயதீ-ஆகச்சந்தீ; வ்யக்யத்-விசஷ்டே, விசேஷேண பச்யதி; அதித-அதிதாரயதி, ததாதி |

